# மழைமேகம்





வாழியூர் வே. இராசவேலன் எம்.ஏ;எம்.எட்.,

# மழை மேகம்



வாழியூர் வே. இராசவேலன் எம்.ஏ.,எம்.எட்.
செயலாளர், கம்பன் கழகம், வாழியூர்.

[—2—90 அன்று வாழியூர் கம்பன் விழாவில் வெளியிடப்பெற்றது.]

பேரரசு பதிப்பகம்
வாழியூர் அஞ்சல்
(வழி) ஒண்ணுபுரம் - 632 315
தி. ச. மாவட்டம்

Mazhai - Megam

R. Minnoli

Published by: Perarasu Pathippagam
Vazhiyur & Post, T. S. Dist.

Printed at : Vannam Press, Vaniyambadi. N.A.A.Dt.

Cover Design: Jamal, Madras.

First Edition : February 1990.

Price : Rs. 14-00

அன்புப் படையல்

என் இலக்கியப் பணிக்கு
உரமூட்டும்
வேலூர் முத்துக்கள் மூவர்
திருவாளர்கள்
வி. எஸ். இரமேஷ்குமார்
க. இராசு
வா. சு. இராமச்சந்திரன்
இவர்களுக்கு என்றன்
மழைமேகத்தை
அன்புக் காணிக்கையாக்கி
அகம் களிக்கின்றேன்.

★ இந்நூலின்
முதற்பதிப்பின் ஈட்டத்தொகை
வாழியூர் கம்பன் கழகத்திற்கு........

## நுண்ணறிவாளர்

*முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பனார்*
இயக்குநர் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

இனிய நண்பர் திரு. இராசவேலன் அவர்கள் இலக்கிய ஆர்வம் மிக்கவர். பரந்துபட்ட தமிழ் இலக்கியத்தில் ஊறித் திளைத்தவர். சங்க இலக்கியம் முதல் இன்றைய இலக்கியம் வரை கற்றுத் தேர்ந்த நுண்ணறிவாளர். தான் பெற்ற இன்பம் இவ்வுலகம் பெற வேண்டும் எனும் நன்னோக்குடன் அரிய கட்டுரைகள் பலவற்றை இந்நூலில் தந்துள்ளார்.

இது போன்று இன்னும் பல நூல்களைச் செய்து தமிழுக்கு அவர் சிறப்புச் செய்வார் எனும் மனநிறைவுடன் அவரை வாழ்த்திப் பாராட்டுகிறேன்.

## சான்றோர் போற்ற வாழ்க

*வெ. கிருட்டிணமூர்த்தி*
பாரத சொற்பொழிவாளர், மேல்பள்ளிப்பட்டு.

எண்ணங்கள் எழுத்தாய்த் தோன்றி
வண்ண நூல் மிளிர வேண்டும்
கண்டவர் மனமும் கண்ணும்
கனிவுற குளிர வேண்டும்
பண்ணமர் பாடல் கற்றப்
பைந்தமிழ்ப் புலவர் ஏறே
தண்ணமர் தமிழ்த்தாய் கண்டு
தழைக்க இவ்வையம் என்பாள்

செந்தமிழ்ச் சிதற லெல்லாம்
சிறந்தஓர் நூலைத் தந்து
பைந்தமிழ் பரவு கின்ற
பாங்குடை இராச வேலர்
எந்தையாம் கந்த வேளின்
இனியநல் அருளைப் பெற்று
சந்ததம் சான்றோர் போற்ற
சகத்தினில் வாழ்க! வாழ்க!

# இலட்சத்தில் ஒருவர்

### அரிமா. க. இராசு பி.ஏ.

மனிதன் பிறக்கின்றான்: வளர்கின்றான்: வாழ்கின்றான்; மறைகின்றான் என்பது சராசரி நிலை. இந்நிலையில் தான் கோடிக் கணக்கானவர்கள் உள்ளனர். தாங்களாகவே தங்களைச் சுற்றிலும் ஒரு வட்டத்தை அமைத்துக் கொண்டு. அதற்குள்ளாகவே அனைத்துச் செயற்பாடுகளையும் நிறைவு செய்து அமைதியாகின்றனர் அல்லது அமைதிப்படுத்தப் படுகின்றனர்.

நாமாகவே உருவாக்கிக் கொள்ளும் செயற்கைத்தளை களையும், விலங்குகளையும் அறுத்தும், உடைத்தும் விசாலப் பார்வையால் உலகை அளக்கும் பான்மை-நல்லெண்ணம் ஆயிரத்தில் ஒருவருக்கே அரும்புகின்றது: இலட்சத்தில் ஒருவருக்கே வாய்ப்புகள் வசப்படுகின்றன; கோடியில் ஒருவருக்கே தொய்வின்றித் தொண்டாற்றவும், முழுவெற்றி பெறவும் இயலுகின்றது.

நம் அருமை நண்பர் பெரும்புலவர் வாழியூர் வே. இராசவேலன் தம் விசாலப் பார்வையாலும் இனிய அணுகுமுறைகளாலும், பைந்தமிழ்ப் புலமையாலும் நம் உள்ளமெலாம் நிறைந்தவர். இந்த நாட்டிற்கும், மொழிக்கும் உருப்படியாகத் தொண்டாற்றித் தமது பெயரை வரலாற்றில் பதிவு செய்துவிட வேண்டும் என்னும் முயற்சி உடையவர். இந்த முயற்சியின் விளைவாக இவர் ஆயிரத்தில் ஒருவர் என்ற நிலையிலிருந்து இலட்சத்தில் ஒருவர் எனும் நிலைக்கு உயர்ந்துள்ளார்.

'இன்பக் களஞ்சியம்' நூல் தந்த இப்பெருமகனார், இந்த 'மழைமேகம்' நூல் மூலம் கோடியில் ஒருவர் எனும் பெருநிலைக்கு உயரவேண்டும் என்று வாழ்த்துகிறேன்: உயர்வார் என்றும் நம்புகிறேன்.

வாழ்க வாழியூரார்! வெல்க தமிழ்!

## மேகம் பொழிக! மேன்மை பெறுக!

முத்து. இராமமூர்த்தி எம்.ஏ.,பி.எட்.
செயலாளர், கம்பன் கழகம், காஞ்சிபுரம்.

உள்ளத்தில் மழைபொழியும் மேகக் கூட்டம்
ஓடிவந்தே உயர்நூலாய் உருவம் கொள்ள
வெள்ளத்தை தேக்குகிற விருப்பத் தோடே
வேண்டுமின்பம் பொழிந்திட்டார் இராச வேலர்!
வெல்லத்தின் சுவைதோற்கும் வேல னாரின்
வெல்லுகிற தமிழ்நடையில்! விளக்கத் தாலே
மெல்லத்தின் தமிழ்ப்புலமை மேன்மை காட்டி
மேதினியில் உயர்கின்றார் எனது நண்பர்!

கொட்டிடவே மாயூரம் நீதி யாளர்
குளிர்தமிழார் கதிரேசர், இராம லிங்கர்
விட்டகலா அடிப்பொடியார், கிருஷ்ணப் பிள்ளை
வென்றிட்ட திரு. வி. க. இவர்கள் வாழும்
பெட்டகமாய் சிந்தனைகள்! பெரிய சொத்து!
பேரறிஞர் பல்லோரின் தத்து வங்கள்
எட்டிடவே புகழுச்சி எழுதித் தந்தார்
இன்தமிழில் எழிலோடு இராச வேலர்!

சிந்தனையில் செழும்மேகம்; தென்றல் காற்று!
தேடிவந்து மழைபொழியும் சீர்மை வானம்!
பந்தியிலே சுவைவிருந்து படைத்து வைத்தார்
பைந்தமிழால் 'மழைமேகம்' பொழிய இன்பம்!
செந்தமிழால் பலபுதையல் தேடித் தந்து
தேசத்தார் புகழ்கின்ற செம்மை வாழ்வை
வந்தடையும் அடியவர்க்கு வளமாய் நன்மை
வழங்குகிற திருமலையான் அருள்க! வாழ்க!

## சேவையே குறிக்கோள்

### தேனி. முருகேசன்

(செயலாளர், இலக்கியப்பணி மன்றம், தேனி.)

'மழைமேகம்' நூல் வெளியிடுவது குறித்து வாழ்த்துகள். எத்தனையோ விதமான இலாப நோக்கத்தையே கருதி ஏராளமான நூல்கள் வெளிவரும் இந்த நேரத்தில் துணிந்து இலக்கியக் கட்டுரை தொகுப்பு வெளிவருவது மகிழ்ச்சிக்குரிய செய்தி. நல்ல பண்பான செயலும், உறுதியான உள்ளமும் சேவை ஒன்றே குறிக்கோள் என்ற உயர்ந்த கோட்பாடுகளைக் கடைப்பிடித்து செயல்பட்டு வரும் தங்கள் தொண்டு தமிழ் இலக்கிய உலகில் தனி முத்திரை பதிக்கும் என்பதில் ஐயமில்லை.

## வாழியூரார் வாழ்க

### அத்திமுர். ஆ. குருசாமி

வெங்கடாச லத்தந்தை தாய்வீர கங்கா
தங்கமெனும் வாழியூரின் சீர்பிறப்பாம் - பொங்கிமகிழ்
பெண்ணரசைந்துடனே பேர்சரசு ராசவேலன்
கண்மணிப் பேரரசை வாழ்த்து.



## நுழைவு வாயில்

உழுவலன்புடையீர்! வணக்கம்!

நலம். நலமே சூழ்க! எனது இவ் இரண்டாவது நூலில் உங்களைச் சந்திக்கின்றேன். முதல் நூலுக்குத் தந்த ஆதரவுபோல் இந்நூலுக்கும் ஆதரவு தருவீர்கள் என்று நம்புகிறேன்.

மேகம் மழையைப் பொழிந்தால் எவ்வாறு பயிர்கள் செழிப்படையுமோ, அதுபோல நம் வாழ்க்கையில் சலிப்பும் அலுப்பும் ஏற்படும் பொழுது நமக்கு ஊன்றுகோலாகப் பயன் படுவது பெரியோர்களின் அறிவுரைகள். இந்நூலில் பல கட்டுரைகள் சான்றோர்களின் வாழ்வையும், கருத்துகளையும் தாங்கி வருகின்றன. எனவே இந்நூலுக்கு 'மழைமேகம்' எனப் பெயரிடப்படுகிறது.

இந்நூல் வெளிவர அன்பும், ஆதரவும், ஆசியும் தந்த பேரரசு நூல்வெளியீட்டுக்குழு; அணிந்துரை அறிஞர்கள்; வண்ணம் பதிப்பகத்தார்; என்றன் கட்டுரைகளை வெளியிட்டு ஊக்கம் அளித்த வேலூர் மாலைமுரசு, சுதேசமித்திரன், ரூசாமலர், தாமரை, விடிவெள்ளி ஆகிய இதழ்களின் ஆசிரியர்களுக்கு என் உளங்கனிந்த நன்றி.

என்றன் எழுத்துப்பணி தொடர உங்கள் ஒத்துழைப்பினை எதிர்நோக்குகின்றேன். நன்றி! வணக்கம்!

எல்லார் வாழ்விலும்
வளமே விழையும்

வாழியூர். வே. இராசவேலன்

# உள்ளுறை



வே. இராசவேலன்; கவிக்கோ அப்துல்ரகுமான்; வேலூர் ம. நாராயணன்

★ நீதி

நாயகர்

*பிறப்பும், பதவியும் :*

வேதநாயகராம் நீதிநாயகரின் பிறப்பிடம் திரிசிரபுரத்திலிருந்து மதுரைக்குச் செல்லும் இருப்புப் பாதை சாலையிலுள்ள குளத்தூராகும். வேதநாயகரின் முன்னோர்கள் சைவ வேளாள குலத்தைச் சார்ந்தவர்கள். முத்தமிழரசர் மூவருக்கும் முன்னரே குளத்தூரில் வாழ்ந்திருந்தவர்கள். அம்மூவேந்தர்களின் வேண்டுகோளின்படி அவ்வரசர்களுக்கு முடிசூட்டும் முறைமையும் அவ்வேளாளர்களிடமிருந்தது. அதனால் அக்குளத்தூர் அவ்வேளாளர்கட்கு உரிமைப் பொருளாக அளிக்கப்பெற்றது. ஆகவே அக்குளத்தூர் வேளாண்குளத்தூர் என்றும் கோனாடென்றும் பெயர் பெற்று விளங்கியது.

வேதநாயகம் பிள்ளையின் முப்பாட்டனார் மதுரநாயகம் பிள்ளைதான் முதன் முதலாகச் சைவமதத்தை விடுத்துக் கிறித்துவ மதத்திற்கு மாறினார். வேதநாயகரின் பெற்றோர் சவுரிமுத்துப்பிள்ளை, ஆரோக்கிய மரியம்மாள்.

நம் நாயகர் 1826ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் பதினொன்றாம் நாள் பிறந்தார். உரிய காலத்தில் கல்வி கற்றார், வழக்கு மன்றம் ஒன்றில் மொழிபெயர்ப்பாளராக வேலைக்கு அமர்ந்தார். பின்னர் சீர்காழிக்கு மாற்றப்பட்டார்.

வேதநாயகம் பிள்ளை அவ்வப்போது தமக்குத் தோன்றிய அறநெறிகளையெல்லாஞ் செய்யுளாகப் பாடி வைத்திருந்தார். அத்தகைய செய்யுள்கள் 'நீதிநூல்' என்ற புத்தகமாக வெளிவந்தது. வேதநாயகர் நீதியை உரைத்தார், ஆம்! மக்களுக்குத் தேவையான நீதிகளை உரைத்தார்.

*எழுதிய நூல்கள் :*

வேதநாயகர் நீதி நூல் மட்டுமல்லாமல் சர்வசமய சமரசகீர்த்தனை, சத்தியவேதக்கீர்த்தனை, திருவருள் மாலை, திருவருள் அந்தாதி, தேவதோத்திரமாலை, தேவமாதா அந்தாதி, பெண்மதி மாலை, பிரதாப முதலியார் சரித்திரம், சுகுண சுந்தரி சரித்திரம், பொம்மைக் கல்யாணம், பெரிய நாயகியம்மன் பதிகம் முதலிய நூல்களையும் இயற்றி நம்செந்தமிழிற்குத் தொண்டாற்றியுள்ளார்.

*அவை அடக்கம் :*

வேதநாயகர் தாம்பாடிய 'நீதி நூலில்' அவையடக்கம் பாடிய பாடலே அன்னாரின் சிறப்பை வெளிப்படுத்து கின்றது. அவரின் இலக்கியச் சுவையை அப்பாடலிலேயே சுவைக்கத் தொடங்குகிறோம்.

'வெயிலினைச் சோதியாக்க விளக்கு ஏற்றி வைப்பது போலவும், காகம் குயிலுக்கு இசையைக் கற்றுத்தருவது போலவும், காட்டுக்கோழி மயிலுக்கு ஆட்டத்தை உணர்த்துவது போலவும் உள்ளது நான் உலகத்திற்கு நீதிநூல் சொல்வது' என்கிறார்.

*வெயிலினைச் சோதி செய்வான்*
*விளக்கிடல் போலும் காகம்*
*குயிலினுக்கு இசை உணர்த்தும்*
*கொள்கையே போலும் நட்டம்*
*மயிலினுக்கு உணர்த்துங் கான*
*வாரணம் எனவும் யாவும்*
*பயில் உலகிற்கு நீதி*
*பகரயான் துணிவு உற்றேனால்* (பக் 10)

(வாரணம் - கோழி)

*ஞானாசிரியன் பெருமை :*

விளக்கெண்ணெய் (ஆமணக்கு எண்ணெய்) குடிக்க யாரும் விரும்பமாட்டார். தேன்பாகோ, கருப்பஞ்சாறோ கொடுத்தால் மகிழ்ச்சியாகச் சுவைத்து அருந்துவர். ஆமணக்கு எண்ணெய் உடலுக்கு நன்மை பயக்கும் எனத் தெரிந்தும் அதனை அருந்தமாட்டார். அறம் கூறினால், நல்லதை நவின்றால் யாரும் கேட்கமாட்டார்கள். இது உலக இயல்பு. ஞானாசிரியன் எப்படி இருக்கவேண்டும் என்பதை நல்ல எடுத்துக்காட்டு மூலம் தருகின்றார் நீதிநாயகர்.

“மருத்துவர் கசப்பு மருந்தின்மேல் இனிப்புப் பூசி உண்பித்து நோயாளியின் நோயை நீக்குவார். அதுபோல ஞானாசிரியன் தன் இனிமையான சொற்களால் அறம் உரைத்து நன்னெறி ஒழுகச்செய்து உயிர்நோயாகிய பிறவியை மாற்றுவார்”

*“கைத்திட்ட மருந்தில் அக்காரம் கலந்து கூட்டி*
*மத்தித்தருள் பண்டிதர் போன்மற நோய் தவிர்ப்பான்*

*எத்திக்கினும் கேட்பவர் காது உளம் இன்பமேவித்*
*தித்தித்திட ஆரியர் நன்மறை செப்புவாரே''*

(அக்காரம்-இனிப்பு;மறம்-பாவம், உயிர்நோய்)
என்கிறார். (பக் : 31)

## *தந்தை தாய் பேண் :*

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்', 'மாதா பிதா குரு தெய்வம்' 'தாயிற் சிறந்ததோர் கோயிலுமில்லை; தந்தைசொல் மிக்கதோர் மந்திரமில்லை' என சான்றோர்கள் கூறியுள்ளனர். பெற்றோரை மதிக்காதவன் பேடி, பெற்றோரைக் காப்பாற்றாமல் அவர்களைப் பிச்சையெடுக்க வைப்பவன் நாயினும் கீழானவன். பெற்றோர் வாக்கினை மறைமொழியாகக் கொள்ளாதவன் மக்களுள் பதர். அவன் இருப்பதும் ஒன்று; இல்லாதிருப்பதும் ஒன்றே. பலர் வந்தவளின் வார்த்தையைத் தலைமேல் கொண்டு பெற்றவனுக்கு இன்னல் விளைவிக்கின்றனர். 'மாதா வயிறு எரிய வாழான் ஒருகாலும்' எனப்படித்ததில்லை போலும். அத்தகையோரை வன்மையாகக் கண்டிக்கிறார் வேதநாயகர்.

''நாம் மரம் வளர்க்கின்றோம். மரத்தைப் பலகாரணங்களுக்காக வளர்க்கின்றோம். மரங்கள் பூ கொடுக்கும், நிழல் கொடுக்கும், கனிகொடுக்கும் என்பதற்காகவும், விறகுக்காகவும் வளர்க்கின்றோம். பூவும் கொடுக்கவில்லை, நிழலும் கொடுக்கவில்லை, கனியும் கொடுக்கவில்லை, விறகுக்கும் பயன்படாது என்றால் அந்த மரங்களை வைத்திருப்பதால் என்ன பயன்? பயன் படாத மரத்தை வெட்டி எரித்து விடுகிறோம். தாய் தந்தையரை வணங்காத அறிவிலாரை, பயன் தராத அப்பாவிகளை இறைவன் இருள் உலகில் தள்ளி வருத்துவான்'' என்கிறார் வேதநாயகர்.

வைத்தவர் உளம் உவப்ப
　　மலர்நிழல் கனி ஈயாத
அத்தருத் தன்னை வெட்டி
　　அழலிடு மாபோல் ஈன்று
கைத்தலத்து ஏந்திக் காத்த
　　காதல்தாய் பிதாவை ஓம்பாப்
பித்தரை அத்தன் கொன்று
　　பெருநரகழற் சேர்ப்பானே! (பக்: 37)

*சான்றோனாக்குதல்:*

கல்வி உயிருக்குக் கண். 'எண் என்ப ஏனை எழுத்து என்ப இவ்விரண்டும் கண் என்ப வாழும் உயிர்க்கு' என்பார் வள்ளுவர். 'எண்ணும் எழுத்தும் கண்எனத் தகும்' என்பார் ஔவையாரும். கல்வி மனிதனைத் தெய்வம் ஆக்குகின்றது. 'கல்வி இம்மை பயக்கும்; ஈயக் குறையாது; தம்மை விளக்கும்.' 'குஞ்சி அழகும்; கொடுந்தானைக் கோட்டழகும்; மஞ்சள் அழகும் அழகல்ல - நெஞ்சத்து நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையால் கல்வி அழகே அழகு' என நாலடியார் ஆசிரியர் கூறுவர். 'மயிர் வனப்பும்; கண்கவரும் மார்பின் வனப்பும்; உகிர்வனப்பும்; காதின் வனப்பும் வனப்பல்ல; சொல்லின் வனப்பே வனப்பு' என்பார் சிறுபஞ்சமூல ஆசிரியர். 'கற்கை நன்றே கற்கை நன்றே; பிச்சைப் புகினும் கற்கை நன்றே' என்பார் அதிவீரராம பாண்டியர். அத்தகைய சிறப்பு மிக்க கல்வியை இளமையில் ஒருவன் கல்லாது கழித்தான் என்றால் பின்னால் அவன்பொல்லாத மூடனாவான். உலகு அவனைத் தூற்றும், அவன் மிருகம் போலத்திரிவான்.

1080

அவனுக்கு இளமையில் கல்வி பயிலச் செய்பவர் யார்? இவ் ஈரமண்ணை வணங்கச் செய்யும் உருவமாகச் செய்யச் சொல்பவர் யார்? அவர்தான் தந்தை "சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே" என்றார் புறநானூற்று ஆசிரியரும்.

நிலையான அக்கல்விச் செல்வத்தை மகனுக்குக் கொடுக்காமல், நிலையற்ற பொருட்செல்வத்தை நிலையெனக் கருதிக் கொடுப்பது தவறாகும். அச்செய்கை முறைதெரியாத கிறுக்கருக்குக் கொலைக் கருவியாகிய வாளைக் கொடுப்பதும் பச்சிளங் குழந்தையைப் பெரிய மலைமேல் ஓரத்தில் வைப்பதும் போன்றதாகும் என்கிறார் நீதிநூல் ஆசிரியர்.

*'கலை பயிற்றாது காதலர்க்கு மாநிதி*
*நிலையென அளிக்குதல் நெறியில் பித்தர்க்குக்*
*கொலைசெய் வாள் ஈவதும் குழவி தன்னை மா*
*மலையின் ஓரத்து வைப்பதுவும் மானுமே'*

(காதலர்-பிள்ளைகள்; மானும்-போன்றது) (பக்: 41)

## *பெண் கல்வி:*

'இடைவனப்புந் தோள் வனப்பும் ஈடின் வனப்பும் நடைவனப்பும் நாணின் வனப்பும், புடைசால் கழுத்தின் வனப்பும் வனப்பல்ல என்ணோடு எழுத்தின் வனப்பே வனப்பு' என்பார் ஏலாதி பாடிய கணிமேதையார். பெண்களுக்கு கல்வி அவசியம் என்பதை பலசான்றோர்கள் சொல்லியிருக்கின்றனர்.

வேதநாயகரும் பெண்கல்வியை வலியுறுத்துகிறார். 'எழுத்து வாசம் அறியாதவள் மட்டி; ஏதும் அறியாள் அவள் சுரண்டுவாள் சட்டி; கழுத்திலே அவளுக்குத் தாலியைக் கட்டி; காரியமில்லை அது காசுக்கு நஷ்டி'

என்று கீர்த்தனையில் படிக்காத பெண்களைக் கண்டிக்-கிறார்.

பெண் கற்றால் கெட்டு விடுவாள், ஆகவே கல்வி வேண்டாம். கற்பதற்கு வெளியே அனுப்பினால் அவள் கற்பு கெடும். ஆகவே வெளியே அனுப்ப வேண்டாம் என ஒரு சிலர் எண்ணுகின்றனர். இச்செய்கை எப்படி இருக்கிறது என்றால், தன் மனையாள் கண் உடையவளாக இருந்தால் அயலானைக் காண்பாள் என்று கருதிக் கணவன் அவள் கண்ணை எளிமையாகப் பிடுங்குவதைப் போலாகும் என்கிறார். எவ்வளவு அருமையான எடுத்துக் காட்டு!

*பெண்மகள் கெடுவள் என்று அஞ்சிப் பெற்றவன்*
*உண்மைநூல் அவட்கு உணர்த்தாமை தன்மனைக்*
*கண் மறு புருடரைக் காணும் என்றதை*
*எண்மையாய்த் தவன் பறித்து எறிதல் ஒக்குமே*

(தவன்-கணவன்; எண்மை-எளிமை) (பக்: 43)

பாரதிதாசன் அவர்களும் பெண்கல்வியை வலியுறுத்துவார்.

*பெண்கட்குக் கல்வி வேண்டும்*
*குடித்தனம் பேணுதற்கே!*
*பெண்கட்குக் கல்வி வேண்டும்*
*மக்களைப் பேணுதற்கே!*
*பெண்கட்குக் கல்வி வேண்டும்*
*உலகினைப் பேணுதற்கே!*
*பெண்கட்குக் கல்வி வேண்டும்*
*கல்வியைப் பேணுதற்கே!*

என்று கூறுகிறார்.

## குடும்ப ஒற்றுமை:

குடும்பம் என்ற வண்டியில் பூட்டப்பட்ட காளைகள் இரண்டும் ஒரே சீராகச் செல்ல வேண்டும். ஒன்றுக்கொன்று ஒவ்வொரு பக்கம் இழுத்துக்கொண்டு சென்றால் வண்டி ஊர் போய்ச் சேராது. ஆகவே கணவன் மனைவி ஒற்றுமை யாக வாழ்தல் வேண்டும். கீரியும் பாம்புபோல் வாழ்தல் நன்றன்று. குடும்ப ஒற்றுமை அவசியம் என்பதை அழகான சான்றினால் எடுத்துத் தருவார் வேதநாயகர்.

ஊர் நாடகத்தில் பொய்யாகக் கணவன் மனைவி யென்று கோலங்கொண்டார், செம்மையாக நடிக்காவிட்டால், எல்லாரும் சிரிப்பர். அதுபோல் உலக நாடகத்தில் உண்மை யாகவே கணவன் மனைவி என்ற இருவரும் செம்மையாக ஒழுகுதல் வேண்டும். இல்லாவிட்டால் உலக நாடகத்தைச் செய்விக்கும் இறைவன் அவர்களைத் துன்பத்தில் புகுத்தி வருத்துவான்.

பொய்யான நாடகத்தில் பதிமனைபோல்
வேடமுற்றோர் பூண்ட கன்மஞ்
செய்யாரேல் நகைக்கிடமாம் உலகறிய
மணவாளன் தேவியென்ன
மெய்யா உற்றோர் தம்முள் நட்பிலரேல்
பிரபஞ்ச விநோதக் கூத்தைக்
கையாற் கொண்டு ஆட்டுவிக்கும் பரனவரை
அழற் புகுத்திக் காய்வான் அம்மா (பக்: 50)

## கற்பெனும் திண்மை:

'பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும் திண்மை உண்டாகப்பெறின்' என்பார் தெய்வப்புலவர்.

அத்தகைய கற்பினை வலியுறுத்திப் பேசுவார் வேதநாயகர். கற்பிலாத பெண் கணவனுக்கு எமனாவாள். 'தீ' தனக்குப் பற்றுக்கோடாகிய விறகு முதலிய பொருள்களைச் சுட்டழித்துத் தானும் அதனுடன் மாய்வது போல் மனைவியும் தனக்குப் பற்றுக்கோடாகிய கணவன் உள்ளத்தைப் பழி பாவங்களினால் சுட்டழித்து உடன்தானும் அழிவாள். அத்தகைய பெண் கழுத்தில் தாலி தொங்க விடுவதால் மட்டும் பயன் என்ன'? என்கிறார்.

*தாங்கு பொருள் சுட்டழித்துத் தானும் அழியும்*
*கனல் போல் தலைவன் நெஞ்சைத்*
*தீங்குகளால் சுடுமனைவி தன்வாழ்வைக்*
*கெடுத்தலால் செழுங் கண்டத்தில்*
*தூங்கு திருநாணினால் என்ன பயன்?*
*அதைக் கழுத்திற் சுருக்கிக் கொண்டு*
*தேங்கும் உயிர்ப்பொறை நீக்கில் பூமகள்தன்*
*பெரும் பொறையுந் தீரு மன்றே* (பக்: 52)

## இருபால் கற்பு:

'கற்பு நிலை யென்று சொல்ல வந்தால் இரு கட்சிக்கும் அஃது பொதுவில் வைப்போம்' என்பார் பாட்டுக்கொரு புலவர் பாரதி. வேதநாயகர் காட்டும் தலைவி தன் கணவனும் கற்புடன் இருக்க வேண்டும் என்று விரும்புகின்றாள்.

தலைவன், தலைவியை ஓவியக் கண்காட்சிகாண அழைக்கின்றான். அதற்குத் தலைவி, 'அங்கே ஆண் பெண் ஓவியங்கள் இருக்கும். ஆணின் ஓவியமானால் நான்பார்க்க மாட்டேன். பெண்ணின் ஓவியமானால் நீங்கள் பார்ப்பதற்கு நான் பொறுமையாக இருக்க மாட்டேன்' என்கிறாள். தன்

தலைவனும் சிறந்த கற்பு நெறியில் இருக்கவேண்டும் என அத்தலைவி விரும்புவதில் தவறென்ன?

ஓவியர் நீள் சுவரெழுதும் ஓவியத்தைக்
கண்ணுறுவான்
தேவியை யாம் அழைத்திட ஆண்சித்திரமேல்
நான் பாரேன்
பாவையர்தம் உருவெனின்நீர் பார்க்க மனம்
பொறேன் என்றாள்
காவிவிழி மங்கையிவள் கற்பு வெற்பின்
வற்புளதால் (பக்: 59)

வரைவின் மகளிர்:

சதை விற்றுக் கதை நடத்தும் கணிகையரைக் கண்டு கவிஞருக்கு வேதனை அதிகமாகின்றது. அவர் உள்ளம் துடிக்கின்றது. இப்படியும் இழி பிறவி உள்ளதே என நினைக்கின்றார். கடலில் எழுந்த நஞ்சு உட்கொண்டவரைக் கொல்லும், பாம்பு கையால் தொட்டவரைக் கொல்லும், தீய பெண்கள் தங்களைப் பார்ப்பவர்களையும் நினைப்பவர்களையும் பெருநஞ்சு போல் கொல்லுவர்.

உண்டவர் தமைக் கொலும் ஓத வெவ்விடம்,
அண்டினோர் தமைக் கொலும் ஆளி கையினால்,
தண்டினோர் தமைக் கொலும் சற்பம், தையலார்
கண்டவர் நினைப்பவர் தமைக்கொல் காலமே

[ஓதம்-கடல்; அண்டல்-நெருங்கல்; ஆளி-அரிமா, சிங்கம்; தண்டல்-தொடுதல்] (பக் : 70)

## ஆணின் ஒழுக்கம்:

வேதநாயகர் வரைவின் மகளிரை மட்டும் சாடவில்லை. கட்டியவள் கட்டிலில் இருக்கக் கண்டவளோடு சரசம் ஆடச் செல்லும் காமுகர்களையும் தூற்றுகிறார். 'தெய்வத்திருவருள் நங்கையைப் போன்ற கற்புள்ள மனைவியரை வெறுத்து ஒதுக்கிப் பொது மகளிரைச் சேரும் கீழோர், இனிமையுள்ள உணவுகள் இருப்பவும் அவற்றை அகற்றி மலத்தை விரும்பி ஓடுகின்ற நாயையும், நல்ல இடத்தை விட்டுக் குப்பை மேட்டில் கிடப்பதற்குத் திரிகின்ற கழுதையையும் மாசில்லாத தூய ஆற்றுநீர் பருகாது சாக்கடைக் கழிவு நீரைக் குடிக்க ஓடும் தாழ்ந்தோரையும் ஒப்பர்' என்பார்.

*சுவையுணவு தானிருக்க மலந்தேடி*
*ஓடுகின்ற சுணங்கன் போலும்*
*குவையதனிற் கிடந்துறு நல்இடநீங்கித்*
*திரிகின்ற கோகு போலும்*
*நவைநீர் தண்நதித் தூநீர் அருந்தாது*
*அங்கண நீரை நாடல் போலும்*
*சிவைஅனைய காந்தையரை வெறுத்து அசடர்*
*வேசையரைச் சேர்வார் மாதோ.*

[சுணங்கன்-நாய்; குவை-குப்பை; கோகு-கழுதை; அங்கணம்-சாக்கடை; சிவை- அருள் மங்கை] (பக்: 213)

இல்லாள் இனிதிருக்க அயல்மனை விரும்பியவன் பட்டபாட்டினைப் பாரதிதாசனார் படம் பிடித்துக் காட்டுவார்.

*கண்ணான மனைவியிடம் திரைப்படம் பார்த்திடக்*
*கருதினேன் என்று புளுகிக்*
*கந்தனோ ஒரு மங்கை வரச்சொன்ன நள்ளிருள்*

வரும்வரை அழகிய திரு

வண்ணா மலைத் திருக்குளப்படி மலக்கழிவில்
அமிழ்ந்தே பதுங்கி நேரம்
ஆனபின் விரைவினிற் போனதோர் போக்கிலே
ஆலமரவேர் தடுக்கப்

புண்ணான காலையும் எண்ணாமல் முள்ளொன்று
பொத்ததும் வாங்காமல் மேல்
புளியங்கி ளையொன்று துளையிட்ட நெற்றியிற்
போட்டகை போட்ட வண்ணம்.

வண்ணான் பெருங்கழுதை மேல்விழுந் துதையுண்டு
தோட்ட வாயிற் சேர்ந்தனன்
வள்ளென்ற தொருநாய் தன் உள்ளங் கலங்கினன்
வந்து வீழ்ந்தனன் வீட்டிலே!

(பாரதிதாசன் கவிதைகள் தொகுதி 4)

மது:

மது மனதைக் கெடுக்கும்; மனிதனை மிருக மாக்கும்; 'மது உள்ளே போனால் மதிவெளியே போகும்' என்பது பழமொழி. 'அது அறிவை அழிக்கும்; செயல் அழிக்கும்; அழியாமானம் தனை அழிக்கும்; செறியும் அறிஞர் மதியாத சிறுமை விளைக்கும்; சினத்தை உண்டாக்கும்; பகை அஞ்சாக் குறிகள் விளைக்கும்; நகைப்பை உண்டாக்கும்' என விநாயக புராணம் கூறும். திருக்குறளும், 'உண்ணற்க கள்ளை உணில் உண்க சான்றோரான் எண்ணப்பட வேண்டாதார்' என்கிறது. சிலம்பை யாத்த இளங்கோவும், 'கள்ளும் களவும் காமமும் பொய்யும், வெள்ளைக்கோட்டியும் விரகினில் ஒழிமின்' என்கிறார். அத்தகைய தீமை விளை விக்கும் மதுவை வேதநாயகர் கடுமையாக வெறுக்கிறார்.

'உயர்ந்த ஊணாகிய ஆன்பாலும், தேனும் வெல்லப் பாகும் விடுத்துக் கள்ளையுண்போர் ஈ மலரை விட்டுப் புண்ணையும் கழிவுக் குருதியையும் வாரியுண்டு மகிழ்வதை ஒப்பர்' என்கிறார்.

*பாலினைத் தேனையின் பாகை நீத்து வெண்*
*மாலியை மாந்துவோர் மலர்க் கள் நீத்து மெய்த்*
*தோலிர ணந்தனைச் சூத கந்தனைக்*
*கோலியுண் டுவக்கும் ஈக்கூட்டம் ஒப்பரே* [பக்: 97]

நாமக்கல் வெ. இராமலிங்கம் அவர்களும் குடியின் கொடுமையைச் சொல்லும் போது,

*'மக்களை வதைத்திடும்*
*மனைவியை உதைத்திடும்'*

என்கிறார்.

*சூது:*

'சூது என்னும் தீதினைத் தொடின் நல்ல பொழுது நாசமாம்; செல்வம் அழிந்து போம்; அல்லல்கள் பல அடர்ந்து வருத்தும்; சூதன் கபடன் அற்பன் என்னும் இழிபழிகள் தொடர்த்து கொள்ளும்; அழிதுயர்கள் விரைந்து வரும்' என்பர் சான்றோர். அத்தகைய இழிவு மிக்கது சூது.

*'சூதர் கழகம் அரவம் அறாக்களம்*
*பேதைகள் அல்லார் புகாஅர்; புகுபவேல்*
*ஏதம் பலவும் தரும்.'*

என சூதாட்டத்தின் கெடுதியை ஆசாரக் கோவை (98) விளக்கும். சூதும் வாதும் வேதனை செய்யும் என்பது அறிஞர் கண்டமுடிவு.

அடியும் ஆண்மையும் வலிமையும் சேனையும்
அழகும் வென்றியும் தம்தம்
குடியும் மானமும் செல்வமும் பெருமையும்
குலமும் இன்பமும் தேசும்
படியும் மாமறை ஒழுக்கமும் புகழும்
முன்பயின்ற கல்வியும் சேர
மடியுமால்; மதி உணர்ந்தவர் சூதின்மேல்
வைப்பரோ மனம்! வையார் (11 : 64)

என தருமன் வாயிலாகச் சூதின் தீமையைச் சொல்வார் வில்லியார். 'ஒருவனுக்குத் துன்பம் பலவற்றையும் உண்டாக்கி அவனுடைய புகழைக் கெடுக்கின்ற சூதைப் போல் வறுமை தருவது வேறொன்று இல்லை' எனப் பொய்யாமொழியார் (குறள் 934) கூறுவார்.

இச்சூதின் கொடுமையை வேதநாயகர் வேதனையுடன் இயம்புகின்றார். 'சூதாடுவோன் தன் அருமையான மனைவி இறந்தாலும், அச் சூதாட்டத்தினின்றும் எழுந்திரான். மேலும் 'அப்பிணம் இவ்வழிதானே வரும்' என்றும் கூறுவான். அதுமட்டும் அல்ல, 'அவள் தாலி சூதாடும் ஒட்டத்துக்கு ஆகும்' என்று மனம் மகிழ்வான். அவன் ஒரு காலும் மேன்மை அடையமாட்டான்' என்கிறார்.

'கவறினை ஆடுவோன் காந்தை வீயினுஞ்
சவமது இவ்வழி செலும் என்று தான் எழான்
அவள் புனைதாலி பந்தயத்துக்கு ஆமென
உவகை பூத்து ஆடுவான் உயர்வு உறான் அரோ'
(பக்: 102)

### சேரிடம் அறிந்து சேர்:

தீயோரிடம் சேருதல் கூடாது. உயர்ந்தவர்களோடு சேருதல் வேண்டும். உயர்ந்தவர்கள் என்போர் கல்வி கேள்வி களால் உயர்ந்தவர்கள்; பண்பால் உயர்ந்தவர்கள்; அன்பாலும், அடக்கத்தாலும் உயர்ந்தவர்கள். தாழ்ந் தோரைச் சேர்ந்தால் தாழ்வே உண்டாகும். அவருக்கு வரும் இகழ்ச்சி நீங்காது. இதனை அழகாகச் சொல்லுகிறார் நீதிநாயகர். 'திருமண வீட்டைச் சேர்ந்த மணமுள்ள பூமாலை சிறப்படையும். அம்மாலை சுடுகாட்டைச் சேர்ந் தால் இழிவடையும்' என்கிறார்.

*மணமனை சேர் மணமாலை மாண்புறும்*
*பிணவனத் தாரிழி வெய்தும் பெற்றியார்*
*கணமதிற் சேர்ந்தவர் கனங்கொண்டு ஓங்குவர்*
*குணமிலார் இனமுறல் குறையுண் டாக்குமே*

[பெற்றியார்-பெரியவர்; கணம்-கூட்டம்; கனம்-பெருமை]

(பக்: 140)

### பொறுமை:

பொறுமை கடலினும் பெரிது. அத்தகைய பொறுமை யை வலியுறுத்துவார் ஆசிரியர். பல் நாக்கைக் கடித்து விட்ட தென்று அதனை உடைப்பவர் இல்லை. பூப்போன்ற கழலணிந்த அடி நடக்கும் போது வழுவி விட்டதென்று அதனை வெட்டுவார் சிலர். சோலைகள் சூழ்ந்த உலகமாகிய பெரிய உடம்பினுக்கு உறுப்புப் போல் கூடி யுறையும் மக்கள் குற்றம் செய்யினும் சிறந்த அறிவுடையார் பொறுத்தல் முறையாகும்' என்கிறார்.

*நாவையே கடித்தது எனப் பல்தகர்க்கும்*
*பேருளரோ நடக்கும் வேளை*
*பூவையே பொருவு கழல் சருக்கியது*

என்றதைக் களைவோர் புவியிலுண்டோ
காவையார் உலகமெனும் பேருடலின்
அவயம் போல் கலந்த சீவர்
தா வையே செய்யினு மிக்கறிவுடையோர்
கமை செய்தல் தகுதி யாமால்
[கா-சோலை; கமை-பொறுமை; தா-குற்றம்]

சூளாமணி பாடிய தோலாமொழித்தேவர் பொறுமையைப்பற்றி அழகான எடுத்துக் காட்டால் விளக்குகிறார். 'சந்தன மரங்கள் தேய்ப்புண்ட விடத்தும் சிறந்த மணத்தை வெளிப்படுத்தும் அதனால் சந்தனத்தின் பெருமை வெளிப்படும். அதனைப்போல் அரசர்கள், சிறியோர் செய்யும் பிழைகளை அதாவது இகழ்தல் முதலியவைகளைப் பொறுத்துக் கொண்டால் உலகத்து உயிர்கள் எல்லாம் அவர்களை வழிபட்டு நிற்கும்' என்கிறார்.

கண்ணிய கடாத்த வேழம்
கவுளினால் உறிஞப் பட்டுத்
தண்ணிய தன்மை நீங்காச்
சந்தனச் சாதி போலப்
புண்ணியக் கிழவர் கீழோர்
பிழைத்தன பொறுப்ப ஆயினும்
மண்ணியல் வளாகம் எல்லாம்
வழிநின்று வணங்கும் அன்றே (262)

முடிப்புரை:

இதுபோல் சிறந்த நீதிகளை வேதநாயகர் நமக்குத் தருகிறார் நீதிகளைத்தரும் இவரை ஏன் நீதிநாயகர் என்று கூறக்கூடாது?

## ★ பண்டித மணியின் நகைச்சுவை

பாண்டிய நாட்டின் உட்பகுதிகளுள் ஒன்று பூங்குன்ற நாடு. அந்தநாட்டின் தலைநகர் மகிபாலன்பட்டி. அவ்வூரில் சிறு குளத்தூர் உடையார் குடியில் முத்துக்கருப்பன், சிகப்பு ஆச்சி தம்பதிகளுக்கு 16-10-1881 வெள்ளிக்கிழமையன்று மகனாகப் பிறந்தார் கதிரேசனார்.

கதிரேசனார் இளம்பிள்ளை வாதத்தினால் பாதிக்கப் பட்டவர். உடல் குறை உள்ளவர்கள் எல்லாம் தனிச்சிறப்பு உடையவர்களாக இருப்பது உலக இயல்பு. ஆங்கிலப் பெருங்கவிஞர் மில்டன் பார்வையை இழந்தவர். இந்தியாவின் அரசப் பிரதிநிதியாக இருந்த வேவல் பிரபு ஒரு கண் பார்வையும், முதுகெலும்பின் வன்மையும் இல்லாதவர். மலையாளக் கவிஞர் வள்ளத்தோல் செவியின் சுவை யுணராதவர். தமிழகத்தின் அரசவைக் கவிஞராக இருந்த பதின்கவனகர் கோவில்பட்டி இராமையா பார்வை இழந்தவர் ஆவார்.

நம்முடைய கதிரேசனாரும் சிறந்த தமிழ் அறிஞராக, ஆராய்ச்சியாளராக, எழுத்தாளராகக் கவிஞராகச் சொற் கொண்டலாக விளங்கினார் 'மேலைச் சிவப்புரி சன் மார்க்க சபை' 'கணேசர் செந்தமிழ்க் கலாசாலை' 'தொல் காப்பியனார் புத்தக சாலை' ஆகியவற்றைத் தொடங்கிப் பொதுத் தொண்டு ஆற்றினார்.

கதிரேசனாருக்குப் பண்டிதமணி என்னும் பட்டத் தைச் சன்மார்க்க சபைதான் வழங்கியது. அக்காலத்தில் அரசியலார், மகாமகோபாத்தியாயப்பட்டம் ஓர் இனத் தவர்க்கே உரியது என்று கருதினர் அதற்குப் பதிலாக பண்டித மணிக்கு 'ராவ்பகதூர்' என்ற பட்டத்தை வழங்க விரும்பிய போது அவர் அதனை ஏற்க மறுத்தார். பின்னர் 1942 ஆம் ஆண்டு அரசியலார் அவரின் பெரும் புலமையைப் பாராட்டி 'மகா மகோபாத்தியாயர்' பட்டத்தை வழங்கிச் சிறப்பித்தனர்.

*பண்டித மணியின் நகைச்சுவை :*

பண்டிதமணி அவர்கள் நகைச்சுவையாகப் பேசுவதில் வல்லவர். அதிலே சிலேடை இருக்கும்; சிந்திக்க வைக்கும் ஆற்றல் இருக்கும். பண்டிதமணி இருமொழிப் புலமை உடையவர். தமிழும் சமஸ்கிருதமும் அவருக்குத் தண்ணீர் பட்டபாடு. தம் இருமொழி புலமைக்கு ஏற்ப தம்முடைய இயற்பெயரும் அமைந்துள்ளது என்பதனை நகைச் சுவையாகக் குறிப்பிடுவார். 'கதிர்' என்னும் தமிழ்ச்சொல்லும் 'ஈசன்' என்னும் வடசொல்லும் சேர்ந்து அமைந்திருப்பதைக் கூறுவார். இவரைப் பற்றிப் புகழ்ந்து பேசிய சில புலவர்களும் இவருக்கு அமைந்துள்ள பண்டிதமணி என்னும் பெயர் இவரது இரு மொழிப் புலமையினை எடுத்துக் காட்டுகின்றது என்பர். 'பண்டித' என்ற வட சொல்லும் 'மணி' என்ற

தமிழ்ச்சொல்லும் ஒன்று சேர்ந்து விளங்குகின்றது என்று கூறுவர்.

### படி இல்லை :

ஒருமுறை நாவலர் வேங்கடசாமி நாட்டார் அவர்கள், பண்டிதமணி அவர்களைத் திருக்கற்குடிக் 'கோவிலுக்கு அழைத்துச் சென்றார். அக்கோவில் திருச்சிக்கு மேற்கே மூன்றாவது மைலில் உள்ளது. நாட்டார் அவர்கள் பண்டிதமணியைக் கோவிலில் ஒவ்வோர் இடத்திற்கும் வழிகூட்டி அழைத்துச் சென்றார். இடையிடையே படி இல்லாமல் இருந்தது. அதனை நாட்டார் அவர்கள் 'படி இல்லை' என்று சொல்லிக் கொண்டே வந்தார். அப்போது பண்டிதமணி, 'இறைவன் சன்னிதிக்கு வந்து படி இல்லை என்று சொல்லாதீர்கள். இறைவன் தானே எல்லாருக்கும் படி அளப்பவன்' என்று கூறிச்சிரித்தாராம். நாட்டாரும் 'படி' என்பதின் சிலேடையையும் அதனைச் சமயத்தில் கூறிய பண்டிதமணியின் திறமையையும் எண்ணி நகைத்தார்.

### பாவையர் :

பண்டிதமணி அவர்கள் தாம்பாடம் நடத்தும் போது மாணவிகளையும் அடிக்கடி கேள்விகள் கேட்பார். அவர்கள் இயல்பாகத் தமக்கே உரிய நாணத்தாலும் அச்சத்தாலும் தெரிந்த விடைகளையும் சொல்லாமல் மௌனமாக எழுந்து நிற்பர். அவர்களின் நிலையைக்கண்ட பண்டிதமணி ஒரு நாள் 'பாவையர்கள் பாவைபோல் நிற்கின்றனர்' என்றார். அவருடைய இத்தகைய நகைச்சுவையைக்கண்டு மாணவிகள் நகைத்தனர்.

### பாற்கடலில் சீனிவாசன் :

ஒருநாள் இரவு தம் நண்பர் ஒருவர் வீட்டில் புலவர் தங்கினார். இரவு உணவு உண்டதும் நண்பர் காய்ச்சிய பால் கொண்டு வந்து புலவரிடம் கொடுத்தார். புலவர் அதனைக் குடிக்கப் போகுமுன் கிண்ணத்தில் ஒரு முறை கண்ணோட்டம் செலுத்தினார். பின்னர் பால் கிண்ணத்தைக் கீழே வைத்துவிட்டு மற்றவர்களைப் பார்த்து, 'பாற்கடலில் சீனிவாசன் பள்ளி கொண்டுள்ள காட்சியைப் பாருங்கள்' என்றார். நண்பர்கள் புரியாது விழித்தனர். பின்னர் புலவரே அதனை விளக்கினார். சீனி-சர்க்கரை; வாசன்-வாசம் செய்பவன்; எனவே சீனிவாசன் என்றால் சர்க்கரையை விட்டு நீங்காமல் வாசம் செய்பவன்; அதாவது எறும்பு, பள்ளிகொள்ளல்-தூங்குதல்; அதாவது செத்துக் கிடத்தால். இக்கட்டெறும்பும் கார் வண்ணம்; திருமாலும் கார்வண்ணம். இக்கிண்ண அளவு பால் பாற்கடல் போல் தானே?' என விளக்கினார். நண்பர்களின் நகையொலி அடங்க வெகுநேரம் ஆயிற்று.

### பெண்மணிகள் :

ஒரு கூட்டத்திற்குப் பண்டிதமணி தலைமை தாங்கினார். கூட்டதின் ஒரு பகுதியில் பெண்கள் இருந்தனர். அவர்கள் பேசிக்கொண்டே இருந்ததால் கூட்டத்தை அமைதியாக நடத்த முடியவில்லை. கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருந்தவர்கள் பெண்களை அமைதியாய் இருக்கும்படி வேண்டினர். அப்போது கதிரேசனார், 'அவர்கள் பெண் மணிகள்; மணிகள் ஒலித்துக் கொண்டுதானே இருக்கும்' என்றார்.கூட்டத்தில் சிரிப்பொலிக்குச் சொல்லவா வேண்டும்?

### இரசம் :

பண்டிதமணி ஒரு சமயம் மறைமலையடிகள் வீட்டிற்குச் சென்றிருந்தார். அங்கே பகல் உணவு

அருந்தும் போது 'கொஞ்சம் ரசம் விடம்மா' என்று நீலாம் பிகை அம்மையாரிடம் கூறினார். அதற்கு அந்த அம்மை யார், 'என்ன ஐயா, ரசம் என்று வடமொழியில் கூறுகிறீர்கள்? சாறு என்று குறிப்பிடுங்கள்' என்றார். உடனே கதிரேசனார் 'சரி அம்மா கறுப்பாயி கொஞ்சம் சாறு ஊற்று' என்றார். 'என்ன ஐயா, என்னைக்கறுப்பாயி என்று அழைக்கிறீர்கள்?' எனக்கேட்டார். அதற்கு புலவர், 'ஆமாம், உன் பெயர் நீலாம்பிகை! 'நீலம்' என்பது தமிழில் 'கறுப்பு'; 'அம்பிகை' என்பதை 'ஆயி' என்கிறோம். ஆகையினால் கறுப்பாயி எனக்குறிப்பிட்டதில் தவறு என்ன?' என்றார். அம்மை யாரின் சிரிப்பிற்கு அளவில்லை!

### *தந்தம்போம் :*

ஒருதடவை பண்டிதமணி கனவொன்று கண்டார். கனவில் இவர் சிவபெருமானிடம் வரம் ஒன்று கேட்டார். அதற்கு சிவன், 'உமக்குத்தந்தம் போம்' என்று வரம் அளித்தார். தாம் கேட்ட வரத்தை சிவபெருமான் கொடுத்து விட்டதாக அவர் கருதினார். காலையில் எழுந்து பார்த்த போது அவருடைய பல் போய்விட்டதாம். 'தந்தம்போம்' என்ற கனவு நனவாயிற்று' என்று பண்டிதமணி நகைச் சுவையுடன் கூறினார். தந்தம் என்பது பல்லையும் குறிக் கிறது அல்லவா?

### *விருந்தும் ரசமும் :*

கரந்தையில் ஒரு விருந்து நடைபெற்றது. புலவர் வரத நஞ்சையப்பிள்ளை ரசத்தைச் சாப்பிட்டுக் கொண்டு இருந்தபோது இருமினார். அப்போது அருகே இருந்த நம் பண்டிதமணி, 'ரசம் அதி காரமோ?' என்று கேட்டார். ரசம் அதிக காரமோ? என்றும், ரசம்அதிகாரம் செய்கிறதோ? என்றும் இருபொருள் படக் கேட்டது அங்கிருந்தோரை யெல்லாம் சிரிக்க வைத்தது.

### எல்லார்க்கும் பெரியவன் :

தூத்துக்குடியில் பண்டிதமணி அவர்கள் ஒரு நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கினார். அப்பொழுது புலவர் ஒருவர் பாரதத்திலிருந்து மேற்கோள் கூறி, 'தேவாதி தேவர்கள் எல்லாரும் வந்தனர். ஆனால் முருகன்தான் எல்லாரையும் விடப் பெரியவனாக இருந்தான்' என்று பொருள் கூறி விளக்கினார். பண்டிதமணி தம் முடிவுரையில், 'சொற்பொழிவாளர் தம்முடைய உரையில் பரமசிவன் பார்வதி முதலியோரும் தேவாதி தேவர்களும் வந்திருந்தனர். முருகன் எல்லார்க்கும் மேலாக இருந்தான் எனக் குறிப்பிட்டார். ஆமாம் பெரியக் கூட்டம். முருகன் குழந்தையல்லவா? ஆதலால் பரமசிவன் குழந்தையைத் தோள் மேல் தூக்கி வைத்திருப்பார். முருகன் எல்லார்க்கும் பெரியவனாகக் காட்சி கொடுத்ததில் வியப்பென்ன?' என்று தமக்கே உரிய நகைச்சுவையுடன் கூறினார். கூட்டத்தில் கையொலி அடங்க வெகு நேரம் பிடித்தது.

### மூடப்பழக்க வழக்கம் :

ஒருமுறை பண்டிதமணி அவர்கள் தலைமையில் ஒரு சீர்திருத்தக்காரர் பல பழக்க வழக்கங்களை வன்மையாகக் கண்டித்துப் பேசினார். கூட்டத்திலுள்ள பெண்களைப் பார்த்து, 'நீங்கள் உங்கள் கணவன்மார்களின் எச்சில் உணவைச் சாப்பிடுகிறீர்களே! அந்தத் தீய வழக்கத்தை ஒழித்துக் கட்டுங்கள். மூடப்பழக்கத்திற்கு முற்றுப்புள்ளி வைத்து விடுங்கள்' என்று ஆவேசமாகக் கூறினார். பண்டிதமணி தம் முடிவுரையில், 'இந்தத் தவறான பழக்கத்தை நீங்கள் விட்டு விடுங்கள். அது மட்டும் போதாது, எத்தனை ஆண்டுகளாக அவ்வாறு உண்டு வந்தீர்களோ, அத்துணைக் காலம் உங்கள் எச்சிலை அவர்கள் உண்ண வேண்டும். அவ்வாறு செய்து பழிக்குப்பழி வாங்கினால்தான் என் மனம்

அமைதி அடையும்' என்று புன்சிரிப்புடன் கூறினார். அவர் பேச்சைக் கேட்டதும் பெண்களின் பக்கமிருந்தும் நகைப் பொலி கேட்டது.

### *கம்பர் யார் :*

கம்பர் யார்? என்ற கிளர்ச்சி தமிழகத்தில் நடை பெற்று வந்தபோது, 'கம்பை உடையவன் கம்பன். யான் கம்பைவைத்துள்ளேன். அவ்வகையில் பார்க்கும் போது யானே கம்பன்' என்று பண்டிதமணி வேடிக்கையாகச் சொன்னார்கள். அருகிலிருந்தவர்கள் சிரித்து' மகிழ்ந்தனர்.

### *விதையில்லா ஆரஞ்சு :*

மேலைச் சிவபுரியில் வ. பழ. சா. வீட்டில் ஒரு நாள் பகலுணவிற்குப்பிறகு ஒரு தட்டில் ஆரஞ்சுப் பழங்கள் வைக்கப் பெற்றிருந்தன பெரிய பழமாக ஒன்றை எடுத்துப் பண்டிதமணி உரித்தார். அதில் விதையே இல்லை. பழத்தைச் சுவைத்து முடித்ததும் பண்டிதமணி, 'பிள்ளைப் பேறில்லாத தாயைப் போல இப்பழம் இருந்தது' என்று உவமை கலந்த நகைச்சுவையுடன் கூறியபோது அங்கிருந் தோர் சிரித்தனர்.

### *முடிப்புரை :*

இவ்வாறு சிலேடையாகவும் நகைச்சுவையாகவும் பேசவல்லவர் பண்டிதமணி. அத்தகைய சான்றோர் 24-10-1953 ஆம் நாளில் இவ்வுலக வாழ்வை நீத்தார். அவர் நூல்களைப் படித்து மகிழ்வோம்.

## ★ காந்திப்பித்தர் இராமலிங்கர்

*'சிந்தையினால் வாக்கதனால் செய்கை தன்னால்*
*தேசத்திற் கோயாது தொண்டு செய்தோன்;'*

எனக் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையினால் வாயாரப் புகழப்பட்டவர் நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை. இக் கவிஞரைப் பற்றி தமிழர்களாகிய நாம் அறிந்து கொள்வது மிக மிக அவசியமாகும். இவர் வாழ்க்கையைப் பற்றி ஒரு சில இவண் காண்போம்.

### *பிறப்பு :*

நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளையவர்கள் சேலம் மாவட்டத்தில் மோகனூர் என்னும் சிற்றூரில் 1888ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 19ஆம் நாள் பிறந்தார். இவருடைய பெற்றோர் வேங்கடராமப் பிள்ளை, அம்மணி அம்மையார். இவருடைய தந்தை காவல் துறையில் ஏட்டாகப் பணிபுரிந்தவர். இவர்தம் பெற் றொருக்கு எட்டாவது குழந்தையாகப் பிறந்தார். முதல்

ஏழும் பெண்குழந்தைகள். பிறக்கப்போகும் குழந்தையாவது ஆணாகஇருக்கவேண்டும் என பல தெய்வங்களை வேண்டிக் கொண்டனர். இவருடைய தாயார், 'கருப்பண்ணசாமி'யின் அருளால் ஆண் குழந்தை பிறந்தது என்று எண்ணி இவருக்குக் கருப்பண்ணசாமி எனப் பெயரிட்டார், பெரியவர் ஒருவர் ஆசியால் தான் ஆண் குழந்தை பிறந்தது எனக் கருதிய இவருடைய தந்தையார், அப்பெரியவர் கேட்டுக் கொண்டபடி இவருக்கு இராமலிங்கம் எனப்பெயரிட்டார்.

## *தாயாரின் அறிவுரை :*

நம் கவிஞருக்கு தாயார்தான் முதல் ஆசிரியராக விளங்கினார். இவருக்குப் பல அறிவுரைகளை வழங்கினார். 'சாமி நீ என்ன வேணுமானாலும் செய்; ஆனால் பொய் மட்டும் சொல்லாதே! போக்கிரி எனப் பெயர் எடுக்காதே' என்பார். தான் சொல்வது மட்டும் அல்ல தன் மகனையும், 'பொய் சொல்ல மாட்டேன்; போக்கிரி எனப் பெயர் எடுக்க மாட்டேன்' என்று சொல்லச் சொல்வார். உலக உத்தமர் காந்தியடிகள் கூறிய வாய்மையும், அகிம்சையுமே கவிஞரின் தாயார் கூறிய இச்சொற்களில் அமைந்துள்ளதை அறியலாம்.

*'யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்*
*வாய்மையின் நல்ல பிற' (300)*

என்பார் பொய்யா மொழிப் புலவர். எல்லாப் பொருள்களுள் ளும் வாய்மையைத் தவிர சிறந்த பொருள் எதுவுமில்லை என்ற கருத்தின் சுருக்கத்தையே கவிஞரின் தாயார் 'பொய் மட்டும் சொல்லாதே' என்று கூறினார்.

*எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்*
*மாணாச்செய் யாமை தலை (317)*

என்பார் வள்ளுவப் பெருந்தகை. 'தீமை உண்டாக்கக் கூடிய செயல்களை மட்டுமல்ல எவ்வளவு சிறிய அளவிலுங்கூட எப்போதும் யாருக்கும் கண்ணியமில்லாதது என்று தன் மனத்திற் படுகிற எதையும் செய்யாமலிருப்பது மிகச் சிறந்த குணம்' என இதற்கு நம் கவிஞர் உரை எழுதுவார். இவ்வள்ளுவர் கருத்தின் சுருக்கமே 'போக்கிரி என்று பெயர் எடுக்காதே' என்ற அறிவுரையாகும்.

விளையும் பயிர் முளையிலே தெரியும் என்பதைப் போல சான்றோர்கள் பிற்காலத்தில் எந்தெந்தத் துறையில் சிறந்தவர்களாக விளங்கினார்களோ அந்தந்தத்துறைகளில் தம் இளமைப் பருவத்தில் ஆர்வம்மிக்கவர்களாக விளங்கினர் என்பதைச் சான்றோர்களின் வரலாறுகளில் இருந்து அறிகிறோம்.பின்னாளில் சிறந்த ஓவியராகவும் புலவராகவும், சமயப் பொறை மிக்கவராகவும் விளங்கிய இராமலிங்கம் பிள்ளை சிறுவயதில் சிறந்த பண்புகள் நிரம்பப் பெற்றவராக இருந்தார். விடியற்காலை எழுந்திருத்தல், நீராடல், இறைவனை வணங்குதல், நல்லவற்றைப் பேசுதல் ஆகிய பண்புகள் இவரிடம் இருந்தன. இப்பழக்கத்தையும் பண்பு களையும் வளர்த்தவர் இவர் தாயாரே!

### *சமயப்பொறை :*

'பல பெயர்களைக் கொண்ட இனிப்புப் பதார்த்தங்கள் எவ்வாறு ஒரே சர்க்கரையில் செய்ததோ அதுபோலப் பல மதங்கள் ஒரே இறைவனிடம் தோன்றின என்றும்; எவ்வாறு ஒரு ஊருக்குப் போகப் பல வழிகள் உள்ளதோ அதுபோல இறைவனை அடைய பல வழிகள் உண்டு' எனவும் சான்றோர் சொல்வர். அத்தகைய சமரச நோக்கு நம் கவிஞருக்கு இளமையிலேயே வேரூன்றியது. இவருடைய வீட்டிலே 'எம்மதமும் சம்மதம்'என்ற கொள்கை வளர்ந்தது. ஆம்! இவருடைய தாயார் வீட்டினர் வைணவர். தந்தை வீட்டினர் சைவர். இவர் சிறுவயதில் அதிகமாக வளர்ந்ததோ

முசுலிம் வீட்டில்! சிறுவயதிலேயே இவருக்கு சமரச எண்ணம் வித்திடப்பட்டது எனலாம்.

அப்பொழுது நாமக்கல்லில் ‘ரசாக் உசேன் சாயபு’ என்ற சர்க்கிள் இன்ஸ்பெக்டர் இருந்தார். அவருடைய மனைவி ‘பதுலாபேகம் அம்மாள்’. அந்த அம்மையார் ஆர்க்காட்டு நவாப் பரம்பரையைச் சேர்ந்தவர். நம் கவிஞரின் தாயார் அடிக்கடி அவ்வீட்டிற்குச் சென்று அவ்வம்மை யாரிடம் பேசிவிட்டு வருவார். அப்பொழுதெல்லாம் நம் கவிஞர் உடன் சென்று வருவார். அம்முசுலிம் அம்மையார் குழந்தையை (கவிஞரை) மடியில் தூக்கி வைத்துக் கொண்டு பழம், ரொட்டி, ஆகியவற்றைத் தருவார். கவிஞர் அதனை விருப்பமுடன் உண்ணுவார். இவருடைய தாயார் ஊண் உணவு உண்பதில்லை. ஆனால் நம் கவிஞரோ முசுலிம் வீட்டில் மாமிச உணவை உண்டு வந்தார். அக்காலத்தில் முகம்மதியர் வீட்டில் இந்துக்கள் உண்பதில்லை. அவர்கள் வீட்டிற்கு செல்வதும் இல்லை. அத்தகைய காலத்தில் நம் கவிஞர் அவ்வீட்டிற்குச் செல்வார்; உண்பார். கவிஞர் 18 வயதுக்குப் பிறகும் கூட அம்முசுலிம் வீட்டிற்குச் சென்று உணவு உண்டுவந்தார். வயது வந்த ஆண்களை முசுலிம் பெண்கள் நேரில் வரவழைத்துப் பேசுவதில்லை. ஆயினும் குழந்தையிலிருந்து கவிஞரை வளர்த்த அத்தாய்க்குத் தன் மகனுக்கு ஒப்பான இராமலிங்கத்தை வரவழைத்து உபசரித்து அனுப்புவதில் எந்தவிதச் சலிப்பும் ஏற்பட வில்லை. அன்புக்கு முன்னால் மொழி, மதம், ஜாதி, சம்பிரதாயம் எல்லாம் அர்த்த மற்றவை.

### மூன்றாவது கண் :

அனைவருக்கும் மூன்றாவது கண் கல்வியாகும். அக்கல்வியை நம் கவிஞர் முதன் முதலில் பழனி ஆசிரியர் சண்முகம் பிள்ளை என்பவரிடம் சிலகாலம் கற்றார். பின்னர்

நம்மாழ்வார் பள்ளியில் சிறிது காலம் பயின்றார். பின் கோயமுத்தூரில் கிளைப்பள்ளி ஒன்றில் கற்றார். இவருக்குக் கணக்குப் பாடம் என்றால் கசப்பாக இருந்தது. 1907ல் மெட்ரிகுலேஷன் தேர்வில் தேர்ச்சி பெற்றார். பின்னர் திருச்சி எஸ். பி. ஜி. கல்லூரியில் பி. ஏ. படித்தார். பிச்சை இப்ரகிம் என்னும் புலவரிடம் தமிழைப் பயின்றார். 1909 ல் இவருக்குத் திருமணம் நடந்தது அதே ஆண்டில் இவருக்குக் கடுமையான காதுவலி ஏற்பட்டது. அதனால் சென்னை சென்றார். காதுவலி தீரவில்லை. மீண்டும் ஊர் திரும்பினார். நாட்டு மருத்துவத்தால் தான் அக்காது வலி ஓரளவு குணம் ஆயிற்று.

## ஓவியப் புலமை :

ஓவியத்தில் இவருக்கு சிறு வயது முதலே ஆர்வம் இருந்தது. இவருக்கு நாமம் போட்டுக் கொள்வதில் அதிக விருப்பம் உண்டு. நெற்றியில் நாமத்தை அழகாகப் போட்டுக் கொள்வார். பின்னாளில் சிறந்த ஓவியராகச் சிறக்கப் போகிறார் என்பதற்கு இதுவே சான்றாகும். தாம் பார்த்த படங்களையும் உருவங்களையும் கோணல் மாணலாகத் தரையில் எழுதிக் களிப்பார். தலை முடியா திருப்பவர்களைப் படம் வரைந்து பேய், பிசாசு என எழுது வார். பல் நீண்டிருப்பவர்களை இராட்சதன், இராட்சசி என எழுதிவிட்டு நகைப்பார்.

நம் கவிஞர் நான்காவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்தார். ஒரு நாள் ஆசிரியர் நம்மாழ்வார் என்பவர் ஒரு கணக்கைக் கரும் பலகையில் எழுதி அதை போட்டு வைக்கும்படி மாணவர்பலரிடம்கூறிவிட்டுஅப்போது நாமக்கல்லில் நடித்துக் கொண்டிருந்த நாடகக் கம்பெனியின் தலைவரான சிந்தாமணி ஆசிரியருடன் வெளியே சென்று விட்டார். ஆசிரியர் சென்றதும் கவிஞர் சட்டைப்

பையில் இருந்த நாடக அழைப்பிதழை எடுத்தார். அதி லிருந்த படத்தைப் பார்த்து தம் பலகையில் வரைந்தார். ஆசிரியர் மீண்டும் பள்ளிக்கு வந்தார். எல்லா மாணவர்களும் கணக்கைக் காட்டினர். கவிஞர் மறந்துபோய் ஆசிரியரிடம் நாடகப்படம் வரையப்பட்ட தம் பலகையை எடுத்துக் காட்டினார். அதைக்கண்ட ஆசிரியர் 'பளீர்' எனஇவர் முழங்காலில் அடித்தார். அலறினார் கவிஞர். அருகிலிருந்த நாடக ஆசிரியர் ஆறுதல் கூறி இராமலிங்கத்தின் சித்திரம் எழுதும் திறமையைப் பாராட்டி ஒரு ரூபாயைப் பரிசாகக் கொடுத்தார். இவருடைய சித்திரம் எழுதும் திறமை ஆரம்பப் பள்ளியிலேயே தோன்றியது.

கல்லூரியில் படிக்கும்பொழுது ஒருமுறை கல்லூரித் தலைவர் ஈ. எச். எலியட் என்ற துரை கட்டுரை ஒன்றைக் கொடுத்து எழுதும்படி மாணவர்களைப் பணித்தார். நம் கவிஞர் கட்டுரை எழுதி முடித்ததும் எலியட் துரையின் உரு வத்தை அழகாக வரைந்தார். இவ்வோவியம் அக்கல்லூரித் தலைவரின் உள்ளத்தைக் கவர்ந்தது. அவரைப் பாராட்டிப் பைபிளையும், கட்டுரை எழுதுவது எப்படி? என்ற நூலையும் பரிசாகத்தந்தார்.

கவிஞரின் ஓவியத்திறமையைப் பொறியாளர் திரு. பா. வே. மாணிக்கவேலு நாயக்கர் கேள்விப்பட்டார். அப்பொறியாளர் கவிஞரிடம் அன்பு கொண்டவர். ஜார்ஜ் மன்னரின் முடிசூட்டுவிழா தில்லியில் நடந்தது. முடிசூட்டு விழா படம் எழுதுமாறு கவிஞரைத் தூண்டினார். கவிஞ ரும், அரசர் அரியணையில் அமர்ந்திருக்க இந்தியத்தாய் முடிசூட்டுவதைப் போல படம் எழுதினார். இப்படம் தில்லியில் அனைவரின் கவனத்தையும் கவர்ந்தது. மன் னர் அண்மையில் அமர்ந்து விருந்து உண்ணும் பெருமை யும் பெற்றார்.

சிம்சன் துரை என்பவர் சென்னையில் பொறியாள ராக இருந்தார். அவருக்கு ஒரு பெண் குழந்தை இருந்தது. அஃது இறந்து போயிற்று. நம் கவிஞரின் ஓவியப் புலமை யைக் கேள்வியுற்ற துரை தன் குழந்தையை ஓவியமாகத் தீட்டும் படியும் அதற்காக ஐம்பது ரூபாய் தருவதாகவும் கூறினார். கவிஞரும் அக்குழந்தையை ஓவியத்தில் வரைந் தார். அதனைத் துரையிடம் கொண்டு சென்று காட்டினார். துரை ஓவியத்தைப் பார்த்துவிட்டு கவிஞரின் இரண்டு தோள்களையும் பிடித்து மெதுவாக குலுக்கி, 'நீங்கள் வெற்றியடைந்து விட்டீர்கள். என் குழந்தையை இங்கே பார்க்கிறேன். படத்தைப் பார்க்கப் பார்க்க துக்கம் பொங்கி வருகிறது.' எனப் பாராட்டினார். கவிஞருக்கு 50க்குப்பதில் எதிர்பாராத விதமாக 675 ரூபாய் கிடைத்தது.

### *வேலை முயற்சி:*

கவிஞருடைய தந்தைக்குத் தன் மகனை ஊர்க் காவல் துறையில் பணிபுரியச் சேர்த்துவிட வேண்டுமென்று முயன்றார். கவிஞருடைய உள்ளமோ ஓவியத்துறையில் நாட்டம் கொண்டிருந்தது. ஆனால் தந்தையாருடைய கட்டாயத்திற்காகச் சில காலம் அரசினர் அலுவலத்தில் எழுத்தராகவும், பள்ளி ஆசிரியராகவும் பணி புரிந்தார்.

### *அரசியல் தொண்டு:*

'தாயகத்தை நேசிக்கிறேன், பெரும் பொருளை விட! பேரழகுப் பெண்ணைவிட! இன்னும் என்னை நான் நேசிப் பதைவிட, தாயகத்தை நேசிக்கிறேன்!' என்பார் சேக்ஸ் பியர். நம் கவிஞர் தாயகத்தின் விடுதலைக்காகப் போரா டினார். வைஸ்ராய் கர்சன் பிரபு 1906ஆம் ஆண்டில் வங்காளத்தை இரண்டாகப் பிரித்தார். இச்செயலை மக்கள் எதிர்த்தனர். நாடெங்கும் கிளர்ச்சிகள் தோன்றின. விடு தலைப் போராட்டம் கொழுந்து விட்டு எரியந் தொடங்

கியது. பாபு சுரேந்திரநாத் பானர்ஜி, சி. ஆர். தாஸ், லாலா லஜபதி, தாதாபாய் நௌரோஜி, கோகலே, திலகர் போன்ற பெருந்தலைவர்களின் சொற்பொழிவுகளைப் பத்திரிகைகளில் படித்தார். சுதந்திரவேட்கை நம் கவிஞர் உள்ளத்தில் எழுந்தது. அரசியல் மேடையிலே ஆங்கில அரசைச் சாடினார்.

*பாரத நாடென்றன் பாட்டன்றன் சொத்து;*
*பட்டயத் துக்கென்ன வீண்பஞ்சா யத்து?*
*யாரிதை வேறோர் அன்னியர் ஆள?*
*அஞ்சிக் கிடந்தது போனது மாள*
*வாரவர் போறவர் யாரையும் நம்பி*
*வாடின காலங்கள் ஓடின தம்பி;*
*வீரமும் தீரமும் வெற்றுரை யாமோ?*
*விடுதலை வேண்டுதல் விட்டிடப் போமோ?*

என முழங்கினார். தம் சொற்பொழிவு திறத்தால் கரூர் வட்டத்தின் காங்கிரஸ் தலைவரானார். புதுச்சேரிக்குச் சென்று வ. வே. சு. ஐயரையும், சுப்பிரமணியசிவாவையும் கண்டு வந்தார். இளம்பள்ளி ஜமீன்தார் இராசலிங்கம் செட்டியாருடைய உதவியோடு திருச்சியில் அரசியல் மாநாட்டைக் கூட்டினார்.

காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவில் இந்தியர் உரிமைக்காகப் போராடினார். அப்போரின் பொருட்டு அடிகள் இந்தியாவில் இருந்து பொருள் உதவியை எதிர் பார்த்தார். நம் கவிஞரும் இம்முயற்சியில் ஈடுபட்டார். நாமக்கல்லில் மட்டும் மூவாயிரம் வெண் பொற்காசுகளை நம் கவிஞர் திரட்டினார்.

## *காந்திப் பித்தன்:*

காந்தியடிகளின் கொள்கைகள் நம் கவிஞருக்கு மிகவும் பிடித்தது. காந்தியாரிடம் சொல்லும் செயலும் ஒன்றாகப் பொருந்தியிருப்பதைக் கண்டார் கவிஞர். அவர் மனம் காந்தியிடம் ஈடுபட்டது.

*காந்திக்கு நிகர்வேறும் உண்டோ - மக்கள்*
*கண்கண்ட ஒருதெய்வம் அன்றோ!*
*சாந்திக்கும் புகழ்தந்த சாந்தன் - உலகில்*
*சன்மார்க்க வாழ்க்கைக்கு வேந்தன்*

எனப்பாடிக் களித்தார். தம்மைக் காந்திப் பித்தன் எனச் சொல்லிக் கொண்டார்.

1932ஆம் ஆண்டில் காந்தியடிகளுடைய மெய்வழிப் போரில் ஈடுபட்ட படியால் ஓராண்டு சிறைத் தண்டனைப் பெற்றார். சிறைவாழ்வு கவிஞரின் நலன்களைக் கெடுத்தன. உடல் தளர்ச்சியடைந்தது. முதல் மனைவி இறந்தார். ஓவியத் தொழில் நின்றது. இவற்றையெல்லாம் கருதாமல் நாட்டுவிடுதலையே முக்கியமாகக் கருதினார்.

காந்தியடிகள் உப்பு சத்தியாக்கிரகப் போரைத் தொடங்கினார். வடநாட்டில் தண்டி என்னும் இடத்தில் காந்தியடிகள் உப்பு காய்ச்சத் தம் தொண்டர்களோடு சென்றார். அதே நாளில் தென்னாட்டில் ராஜாஜியும் வேதாரணியம் என்ற இடத்திலிருந்து அணிவகுத்துச் சென்று உப்பு எடுத்தார். அப்பொழுது கவிஞர் பாடிய

*'கத்தி யின்றி ரத்த மின்றி*
*யுத்த மொன்று வருகுது*
*சத்தி யத்தின் நித்தி யத்தை*
*நம்பும் யாரும் சேருவீர்!'*

என்ற வழிநடைப் பாடலே நம் கவிஞரைத் தேசியக் கவிஞர் என்ற சிறப்பான இடத்தைப் பெறச் செய்தது. கவிஞரின் தேசியப் பாடல்களை வியந்த மூதறிஞர் இராஜாஜி, 'இந்நேரம் பாரதியார் இல்லையே என்று எண்ணினேன். ஆனால் அந்தக் குறையை நீங்கள் நீக்கி விட்டீர்கள்.' என்று புகழ்ந்து கடிதம் ஒன்று எழுதிப் பாராட்டினார்.

## நாடகப் பாடல்கள்:

அந்நாளில் நாடகமேடைகளில் புகழ்பெற்று விளங்கிய கிட்டப்பா நம் கவிஞருடைய பாடலைப் பெரிதும் விரும்பினார். நாடகப் பாடல் எழுதிக் கிட்டப்பாவிடம் தந்தார். பாரதியாரை ஒருமுறை கவிஞர் சந்தித்தார்.பாரதியார், பாடல் ஒன்று பாடும்படி கேட்டார். கவிஞர், கிட்டப்பா நாடகத்திற்காகத் தாம் எழுதிய இராமபிரான் சோகப் பாட்டான,

*'தம்மரசைப் பிறர் ஆள விட்டுவிட்டுத்*
*தாம் வணங்கிக் கைகட்டி நின்ற பேரும்'*

என்ற பாடலைப் பாடினார். பாரதியார் துள்ளி எழுந்தார். 'பலே பாண்டியா! பிள்ளை! நீர் ஒரு புலவன் ஐயமில்லை.' என்று பாராட்டினார்.

## இயற்றிய நூல்கள்:

அவளும் அவனும், மலைக்கள்ளன், மாமன் மகள், என் கதை, இலக்கிய இன்பம், கம்பரும் வால்மீகியும், திருக்குறள் புதுஉரை, திருவள்ளுவர் திடுக்கிடுவார், திருவள்ளுவர் இன்பம், தமிழ்மணம், தமிழன் கண்ட அரசு, தேமதுரத் தமிழோசை, தமிழ்மொழியும் தமிழரசும், தமிழ்த்தேன், தமிழன் இதயம், சங்கொலி, கீர்த்தனங்கள், கவிஞன் குரல், தாயார் கொடுத்ததனம், அன்புசெய்த அற்புதம் முதலிய பல நூல்களைக் கவிஞர் இயற்றியுள்ளார்.

*பாராட்டும் பதவியும்:*

அரசினர் கவிஞருக்குப் பத்மஸ்ரீ, பத்மவிபூஷன் என்னும் பட்டங்களை வழங்கிச் சிறப்பித்தனர். அரசினர் இவரை அரசவைக் கவிஞராக இருக்கச் செய்து பெருமை படுத்தினர். இறுதிக்காலத்தில் கவிஞரின் நிலையை உணர்ந்து திங்கள் தோறும் பொருளுதவியும் செய்தனர்.

*மறைவு:*

'தமிழ் நாட்டில் நாமக்கல் கவிஞரின் பேர் மூலை முடுக்குகளிலும் பரவியிருக்கிறது. பண்டிதர் பாமரர் யாவரும் அவரைப் பாராட்டுகின்றனர். அவர்பேருள்ள எந்நூலும் எளிதில் ஏற்றுக் கொள்ளப்படும்' எனத் திரு. வி. க. வினால் பாராட்டப்பட்டார் கவிஞர். சிறந்த உரையாசிரியராகவும், இசைப் பேரறிஞராகவும், சிறந்த ஓவியராகவும் விளங்கிய நாமக்கல் இராமலிங்கம்பிள்ளை 24-8-72ல் இவ்வுலக வாழ்வைத் துறந்தார். வாழ்க அவர் புகழ்!

## ★ தோலாமொழித் தேவரின் கற்பனைவளம்

### தோலாமொழித் தேவர்:

தோலாமொழித்தேவர் சூளாமணி என்ற நூலைச் செய்து அருளிபவர். இவருடைய இயற்பெயர் தெரியவில்லை. இப்புலவர் தன்னுடைய நூலான சூளாமணியில் இரண்டு இடங்களில் 'ஆர்க்குந் தோலாதாய்' (1472) 'தோலாநாவிற்சுச்சுதன்' (807) என்ற சொற்றொடர்கள் வழங்கி இருத்தலால் அச்சொற்தொடர்களின் அருமையை உணர்ந்த பிற்காலத்துச் சான்றோர் இவரைத் தோலாமொழித்தேவர் என்று வழங்கலாயினர். இவர் கார்வெட்டியரசன் விசயன் என்பவனுடைய காலத்தவர் என ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

### சூளாமணி:

சூளாமணி ஐஞ்சிறு காப்பியங்களுள் ஒன்று. மற்றவை நீலகேசி, உதயணகுமார காவியம், யாசோதரகாவியம், நாககுமாரகாவியம் என்பன. 'சூளாமணிக்கு முதல் நூல் ஆருகதர் நூலாம் மகாபுராணம். அதற்குரிய சங்கிரக

நூலின் மொழிபெயர்ப்பாம் ஸ்ரீபுராணம் மணிப்பிரவாள நடையில் உள்ளது. அதன் பதினொன்றாவது சிரேயாம்ஸ் ஸ்வாமி புராணத்தில் இக்கதை காணப்படுகிறது. இதில் காணப்பெறும் விசயனும் திவிட்டனும் பாகவதத்தில் காணும் பலராமன், கண்ணன் ஆகியோருடன் ஒப்பிட்டு எண்ணுவ தற்கு உரியர்' என்பர்.

'இந்நூல் சேந்தனது அவைக்களத்தில் அரங்கேற் றப்பட்டதென்று சிறப்புப்பாயிரம் கூறுகின்றது. சூளாமணி என்பது சூடாமணி என்பதன் திரிபு என்பர். அஃது ஓர் தலையணி. சொல்நயம் பொருள் நயங்களால் எல்லோரும் தலைமேல் கொள்ளத்தக்கது என்றகருத்தில் இந்நூலுக்குப் பெயரிடப் பட்டது போலும். சூளாமணி ஓர் தெய்வமணி யெனப் பிங்கல நிகண்டு கூறும். அத்தெய்வமணியைப் போன்றது என்ற கருத்தால் இப்பெயரிடப்பட்டதென்றும் சிலர் கூறுவர். இனிச் சீவகனைச், 'சிந்தாமணியே கிடத்தி யால்' என்று பெயர் வந்தாற் போன்று, இக்காப்பியத்தலை வனாகிய பயாபதியைத்

துளங்கா துயர்ந்துலகின் முடிக்கோர்
சூளாமணி யானான் [முக்திச் சருக்கம் 59]

என்று பாராட்டியது பற்றி இந்நூலுக்குச் சூளாமணி என்று பெயரிட்டிருக்கக் கூடும்' என்பர்.

## கற்பனை:

சூளாமணி நூலின் கண் உள்ள கற்பனை நயங்கள் ஒரு சிலவற்றைக் காண்போம். 'கற்பனை கலைஞனுக்குக் கற்பகத்தரு. கேட்டதை எல்லாம், நினைத்ததை எல்லாம் உடனடியாக அளிக்கும் வன்மையும், வண்மையுமுடையது கற்பகத்தரு. கற்பனை என்பது மனத்தின் படைப்பு. அதற்குக் கட்டுப்பாடோ வரையறையோ, கால இடசெயல்

எல்லைகளோ இல்லை. மனிதன் தன் புறக்கண்களால் காண இயலாத பலவற்றை மனத்தின் அகக்கண்களால் கண்டு இன்புறுகிறான். இவ்வியப்புறும் அகக் காட்சி, எண்ணங்களாக வெளிப்பட்டுக் கற்பனையாக உருப் பெறுகின்றது' என்பர் சான்றோர்.

## குறிஞ்சி :

சூளாமணி ஆசிரியர் சுரமை நாட்டு நானில வளத்தில் ஒன்றான குறிஞ்சி நிலத்தைப் பாடுகிறார்.

குறிஞ்சி நிலத்தில் ஆண்யானைகள் தினை முதலிய வற்றைத் தின்று விட்டு உறங்குகின்றன. அவ்யானைகளின் மதநீரில் வண்டுக் கூட்டங்கள் இடைவிடாது மொய்க் கின்றன. அதனால் யானைகளின் உறக்கம் கெடுகிறது. யானைகளின் உறக்கம் கெடுவதைக் கண்ட பிடிகள் (பெண் யானைகள்) வருந்துகின்றன. இப்பிடிகள் காந்தள் பூங்கொத்தினால் வீசி அவ்வண்டுகளை ஓட்டுகின்றன.

*காந்தள் அம்குலையால் களிவண்டினம்*
*கூந்து இளம்பிடி வீசிக் குழாங்களோடு*
*ஏந்து சந்தனச் சாரல் இருங்கைமா*
*மாந்தி நின்று உறங்கும் வரை மாடெலாம்* (25)

இத்தகைய அன்பினைகலித்தொகையிலும்காணலாம். தன் அன்பைக் கவர்ந்து கொண்ட மெல்லிய பெண்புறா கோடையால் தளர்ந்து வருந்தும் வருத்தத்தைத் தன் மெல்லிய சிறகை விரித்து நிழல் அளித்து ஆண்புறா போக்கும்; அது மட்டுமன்று பாலை நிலத்தில் நிழல் இல்லாமையால் வருந்தும் பெண்மானுக்கு அதன் மீது வெயில் விழாவண்ணம், தன் உடல் நிழலைக் கொடுத்து கலைமான் உதவும்.

'அன்புகொள் மடப்பெடை அசைஇய வருத்தத்தை
மென்சிறகரால் ஆற்றும் புறவு' (பாலைக்கலி 10:12, 13)
'இன்நிழல் இன்மையால் வருந்திய மடப்பிணைக்குத்
தன்நிழலைக் கொடுத்தளிக்கும் கலை'.
(பாலைக்கலி 10:16, 17)

### வண்டுகளின் மயக்கம்:

போதனா நகரத்து மாடங்களில் தாழியில் (வாயகன்ற தொட்டி) குவளை மலர்கள் பூத்திருக்கின்றன. வண்டுகள் கருங்குவளை மலர்களிடத்துச் செல்லுகின்றன. அம்மலர்கள் மங்கையரின் கண்களைப் போல விளங்குவதை வண்டுகள் காண்கின்றன. கண்கள் என்றே முடிவு செய்து விடுகின்றன. அவற்றில் மொய்க்காமல் திரும்பி விடுகின்றன. திரும்பிய வண்டுகள் மங்கையரின் கண்களின் அருகே செல்கின்றன. அக்கண்களைக் கண்டு அவற்றை குவளை மலர்கள் என்று முடிவு செய்து மொய்க்கத் தொடங்குகின்றன. அவ்வண்டுகளை அம்மகளிர் ஓட்டுகின்றனர். அவை மொய்க்க முடியாது திரும்புகின்றன. மீண்டும் செல்கின்றன. அம்மகளிர் ஓட்டுகின்றனர். வண்டுகள் திரும்புகின்றன. இவ்வாறு பலமுறை சென்றும் மீண்டும் வண்டுக் கூட்டங்கள் மயங்கி அலறி வருந்தித்திரிகின்றன. இக்காட்சியை ஆசிரியர்,

*தாழிவாய்க் குவளையும் தண்ணென் ஓதியர்*
*மாழைவாள் நெடுங்கணும் மயங்கி வந்துசென்று*
*யாழ்அவாம் இன்குரல் ஆலித்து ஆர்த்தரோ*
*ஏழைவாய்ச் சுரும்பினம் இளைக்கும் என்பவே [44]*
*[மாழை - மாமரம்]*

வண்டுகள் மயக்கத்தினை வேறு ஒரு இடத்திலும் தோலாமொழித்தேவர் குறிப்பிடுவார்.

வித்தியாதர மன்னனின் தூதுவன் மரீசி என்பவன். அவன் பயாபதி மன்னனிடப் தூது வருகின்றான். அத்தூதுவன் பயாபதி மன்னன் நாட்டிற்கு வந்து பொழிலில் தங்குகின்றான். அவனுக்குப் பணி செய்ய பயாபதி மன்னன் அழகில் சிறந்த பெண்களை அனுப்பி வைக்கின்றான். அப் பெண்கள் பொழிலை நோக்கி நடந்து செல்கின்றனர். அவர் கள் உடல் அசைகின்றது. அதனால் அவர்களுடைய மேகலையும், சிலம்பும் ஒலி செய்கின்றன. அவர்களுடைய மின் அவிர் மணிக்குழைகள் விட்டுவிட்டு ஒளி ததும்பு கின்றன• அன்னம் போன்று அவர்கள் நடந்து வருகின்றனர்.

அம்மகளிர் கூந்தலில் பூக்களைச் சூடியிருக்கின்றனர். அதனால் கூந்தலில் வண்டுகள் மொய்க்கின்றன. அக் கூந்தலிலுள்ளஅகில் புகையினால் அவ்வண்டுகள் மிகவும் வருந்துகின்றன. அக்கூந்தலில் உள்ள மலர்களை விடுத்து அப்பெண்களின் கண்களை கருங்குவளை மலர்கள் என்று நினைத்து தேனருந்த அங்குசெல்கின்றன. அவ்வண்டு களின் தொல்லைகளைப் பொறுக்காத அம்மகளிர் அவற்றி னைத் தம் கைகளினால் ஓட்டுகின்றனர். அக்கைகளைக் கண்ட வண்டுகள் அதனைக் காந்தள் மலர்கள் என நினைத்து கைகளில் மொய்க்கச் செல்கின்றன. இதனை ஆசிரியர்,

*பூவிரிகுழல் சிகை மணிப் பறவை போகா*
*ஆவிகொள் அகிற் புகையுள் விம்மி அவர் ஒண்கண்*
*காவிஎன ஊதுவன கைத்தலம் விலங்க*
*மேவி இவை காந்தள் என வீழ நொந்தார்.* [455]

என்று பாடுவார்.

விவேகசிந்தாமணியில் ஒரு அழகான பாடல். வண்டுகள் மலர்களிலுள்ள தேனை உண்டு மயங்கிக் கிடக்கின்றன. அதை ஒரு பெண் பார்க்கின்றாள், ஒருவண்டு அவள் முகத்தை ஆகாயத்தின் கண்ணுள்ள திங்கள் என்றும் அவள் கைகளைத் தாமரை மலர் என்றும் நினைக்கின்றது. அவ்வாறு நினைத்து திங்களின் வரவால்தாமரை மூடிக் கொள்ளுமே என அச்சமுற்று பறந்து ஓடி விடுகின்றது. இவ்வழகிய பாடலைச் சுவைப்போமா?

*தேன் நுகர் வண்டு மதுதனை உண்டு*
*தியங்கியே கிடந்ததைக் கண்டு*
*தானதைச் சம்புவின் கனியென்று*
*தடங்கையால் எடுத்து முன் பார்த்தாள்*
*வானுறு மதியம் வந்தது என்று எண்ணி*
*மலர்க்கரம் குவியும் என்று அஞ்சிப்*
*போனது வண்டோ பறந்ததோ பழந்தான்*
*புதுமையோ இதுவெனப் புகன்றாள்.* [19]

### *பாறையில் பூத்த மலர்கள்:*

இரதநூபுரம் என்பது வித்தியாதர நகரங்களில் ஒன்று. இது சேடி நாட்டின் தலைநகரம். இதனை ஆட்சி செய்பவன் சுவலனசடி என்பவன். வித்யாதரர் வானத்தில் வாழ்வோர். அவ்வித்யாதரர்களுள் பெண்கள் நிலத்திலும் நடை பழக விரும்பி, பளிங்குப் பாறைகளில் அடிவைத்து நடக்கின்றனர். அப்போது அவர்கள் கால்களில் பூசப்பட்ட செம்பஞ்சுக் குழம்பு கீழே பதிகின்றது. அவ்வாறு பதியப் பெற்றுள்ள அந்தப் பளிங்குப் பாறை அவர்களுடைய கணவரின் உள்ளங்களைக் கவர்கின்றது. அவர்கள் கால் வைத்த இடங்களில் பதிந்த செம்பஞ்சுக் குழம்பை

வண்டுகள் தாமரை மலர்கள் என்று கருதி ஊதுகின்றன. இதனைத் தேவர்,

*மாதரார் நடை கற்கிய வான் இழிந்து*
*ஊது வண்டு என ஊழ்அடி ஊன்றிய*
*பாதராகம் பதித்த பளிக்கு அறை*
*காதலார் தங்கண் கவர்கின்றவே* [127]

## வணங்கும் தளிர்கள்:

வேனிற் பருவத்தில் சுவலனசடி எனும் அரசன் மனோவனம் என்னும் பொழிலை அடைகின்றான். அப் பொழில் அரசனை வரவேற்ற காட்சியை அழகாகச் சித்தரிக் கின்றார் ஆசிரியர்.

பொழிலில் உள்ள மாமரங்கள் மணம் பொருந்திய மலர்களைச் சொரிகின்றன. அவை அரசனை வரவேற்பது போல இருக்கின்றன. பொழிலிலுள்ள குயில்கள் கூவுவது அவ்வரசனுக்கு வாழ்த்துக் கூறுவது போலவும், இளங் கொடிகளிலுள்ள குவிந்த தளிர்கள் அரசனுக்கு மங்கல வாழ்த்துப்பாடல் பாடும் மாதர்கள் கைகூப்புவது போலவும், கொடிகளில் உள்ள வண்டுகள் ஒலிப்பது அம்மன்னனுக்கு வாழ்த்தொலி கூறுவது போலவும் இருக்கின்றன என்கிறார்.

*கோமான் சென்று அணைதலுமே*
*கொங்கனிந்த மலர் தூவித்*
*தேமா நின்று எதிர்கொள்ளச்*
*சிறுகுயில் போற்றிசைத்தனவே*
*வாமான்தேர் மன்னற்கு மங்கலஞ்*
*சொல் மகளிரைப் போல்*

*தூமாண்ட இளங்கொடி தம்*

*தளிர்க் கையால் தொழுதனவே* (169)

(வாமான் - தாவுகின்ற குதிரைகள்)

பயாபதி மன்னனுடைய மக்கள் விசய, திவிட்டர். அவர்கள் பொழிலுக்கு வருகின்றனர். பொழிலில் உள்ள குருக்கத்திக் கொடிகள் மகரந்தத் தாது படிந்த தேனை தெளிக்கின்றன. அவ்வாறு தெளித்த நீரின் மேல் மலர்கள் சிந்துகின்றன. அச்சமயம் தளிர்கள் அசைகின்றன. இதனைக் கண்ட ஆசிரியர் மாதவிக் கொடிகள் விசய திவிட்டர்களை 'இங்கு வருக' என்று கூறித் தம்முடைய தளிர்களாகிய கைகளினால் அவர்கள் தங்குவதற்கு உரிய இடங்களைக் காட்டுவனவாக இருக்கின்றன என்கிறார்.

*தாதுநின்ற தேறல்நீர் தெளித்து இவற்றின் மேல்அளி*

*கோதுகின்ற போது கொண்டு சிந்தி நம்பிமார்களை*

*மாதுநின்ற மாதவிக்கொடிகள் தம்தளிர்க்கையால்*

*போதுக என்று இடங்கள் காட்டுகின்றபோல் பொலிந்தவே*

[491]

கம்ப இராமாயணத்தில் ஒரு காட்சியை நினைவு கூர்தல் வேண்டும். இராமனும் இலக்குவனும் கோசிக முனிவரோடு மிதிலை நோக்கிச் செல்கின்றனர். மதிலிலுள்ள கொடிகள் இயற்கையாகக் காற்றில் அசைகின்றன. அதனைக் கண்ட கம்பர், அக்கொடிகள் அசைவதற்குக் காரணம் கற்பிக்கின்றார். 'மிதிலை நகர் செய்த தவத்தால் திருமகள், தான் வசிக்கின்ற தாமரையை நீங்கி இம்மிதிலை வந்து இருக்கின்றாள். ஆகவே விரைவில் வருக' என இராமனை அழைப்பதாகக் கூறுகின்றார்.

மைஅறு மலரின் நீங்கி
யான்செய் மாதவத்தின் வந்தி
செய்யவள் இருந்தாள் என்று
செழுமணிக் கொடிகள் என்னும்
கைகளை நீட்டி அந்தக்
கடிநகர் கமலச் செங்கண்
ஐயனை ஒல்லைவா என்று
அழைப்பது போன்றது அம்மா [480]

நாகூர்ப் புராணத்திலும் ஒரு காட்சி. இப்புராணத்தின் ஆசிரியர் குலாம் காதிறு நாவலர். நாகூரில் அடக்கம் ஆகியிருக்கிற 'ஹாலறத்து மீறான் சுல்தான் சையது அப்துல் காதிறு ஷாகுல் ஹமீது பாஷா சாகிப்' அவர்களைப் பற்றிய புராணம் இது.

நாகூரின் மாடங்களிலுள்ள கொடிகள் ஆடிக் கொண்டிருக்கின்றன. அப்படி ஆடுகின்ற கொடிகள், 'இந்த ஊரில் அடக்கமாகி இருக்கும் நாகூர் ஆண்டவரின் பாதங் களைப் போற்றினால் எல்லா துன்பங்களும் குறையும், வறுமையும் ஒழியும். ஆகவே நீங்கள் எங்கள் ஊருக்கு வாருங்கள்' என்று அழைப்பது போல இருக்கிறது என்கிறார் கவிஞர்.

கூருமா அழுங்கலும் குலைந்தறாத இன்மையும்
சீருலாவும் எம்பிரான் செழும்பதம் பழிச்சினால்
தீருமால் வருந்தினீர்! திருக்கலந்த எங்களூர்
வாரும் என்று அழைப்பது ஒக்கும் மாடம் ஆடும்
தோகையே

*நாடக அரங்கு:*

திவிட்ட நம்பிக்கு விசயன் குறிஞ்சி நில வனப்பினை

எடுத்துக் கூறுகிறான். குறிஞ்சி நிலத்தை நாடக அரங்க மாகக் கவிஞர் கூறுகிறார்.

*அரங்கம் - மணிகள் பரவிய குறிஞ்சிநிலம்*
*விறலியர் - மயில்கள்*
*இசை - குழல்*

*(வண்டு தன்வாயால் துளைக்கப்பட்ட மூங்கிலில் காற்று வீசுவதால் இசையைத் தோற்றுவிக்கின்றன)*

*மத்தளஒலி - மேகங்களின் முழக்கம்*
*பின்னனி பாடகர் - வண்டுகள்*

*தும்பிவாய் துளைக்கப் பட்ட*
*கீசகம் வாயுத் தன்னால்*
*வம்புஅவாம் குழலின் ஏங்க*
*மணியறை அரங்கமாக*
*உம்பர்வான் மேகசால ஒலி*
*முழாக் கருவியாக*
*நம்பதேன் பாட மஞ்சை*
*நாடக நவில்வ காணாய் [766]*
*(கீசகம் - மூங்கில்)*

கம்பன் மருதத்தை அரசியாக்கி அவள் கொலுவீற்றி ருக்கும் பாங்கினைச் சுவைபடக் கூறுவான்.

*நாடக அரங்கு - சோலை*
*நடன மங்கையர் - மயில்கள்*
*விளக்குகள் - தாமரைமலர்கள்*
*மத்தளம் - மேகங்களின் முழக்கம்*
*திரைச்சீலைகள் - நீரலைகள்*
*இன்னிசை - வண்டுகளின் ரீங்காரம்*
*பார்வையாளர்கள் - குவளை மலர்கள்.*

*தண்டலை மயில்கள் ஆடத்*
*தாமரை விளக்கம் தாங்கக்*
*கொண்டல்கள் முழவின் ஏங்கக்*
*குவளை கண்விழித்து நோக்கத்*
*தென்திரை எழினி காட்டத்*
*தேம்பிழி மகர யாழின்*
*வண்டிகள் இனிது பாட*
*மருதம் வீற்றிருக்கும் மாதோ.* [35]

**பாலையின் வெம்மை:**

பாலை நிலத்தின் கொடுமையை அழகாக சித்தரிக்கிறார், தோலாமொழித் தேவர். வெப்ப மிகுதியால் குகைகள் வெடித்து நெருப்பைக் கக்குகின்றன. மேட்டு நிலத்தின் பக்கத்தேயுள்ள மூங்கில்கள் பிளந்து முத்துக்களைச் சொரிகின்றன. அம்முத்துக்களை முகில்களினின்றும் சிதறி வீழும் நீர்த்துளிகள் என்று கருதி மான்கள் வாயிலேற்று நீரின்மையால் மனமுடைந்து விழும் என்கிறார்.

*முழையுடைந்து அழல் காலும் முரம்பு அயல்*
*கழையுடைந்து உகும் கண்கவர் நித்திலம்*
*மழையுடைந்து உகும்நீர் என வாய்மடுத்து*
*உழை உடைந்து உகுகின்றன* [779]

(முழை - குகை; கழை - மூங்கில்; உழை - மான்)

இங்கு கலித்தொகையில் வரும் காட்சி ஒன்றினைப் பார்ப்போம். வேனில் பருவத்தின் வெம்மையால் களிறுகள் வருந்தி உடல் தளர்கின்றன. அப்பாலையில் மழையே இல்லை. தொலைவில் நின்று நோக்குவார்க்கு கானல் நீர் நீர்நிலைபோல் தோன்றுகின்றன. அக்கானல் நீரை நீர் எனக் கருதி களிறுகள் ஓடுகின்றன என்கிறார்.

வேனில் உழந்த வறிது உயங்கு ஓய்களிறு
வான் நீங்கு வைப்பின் வழங்காத் தேர் நீர்க்கு அவாவும்
(பாலைக்கலி 6 : 1,2)

### ஞாயிறு

சூரியன் மறையும் விதத்தையும் அதற்கான காரணத்தையும் அருமையாகப் படம் பிடித்துக்காட்டுகிறார் சூளாமணி ஆசிரியர். 'சுயம்பிரபையின் மணவிழா நாள் நாளைக்கு எனத் தெரிந்து கொண்ட ஆதவன்; யானும் எனது சுற்றத்தார் சூழவந்து அத்திருமண விழாவினைக் கண்டு மகிழ்வேன்' என்று எண்ணிக் குடதிசை கனபொன் குன்றில் சிகரத்திடத்தே அருவியாகிய மலர்மாலையை அணிந்துள்ள ஒளியுடைய கொடுமுடியின் தலையை எய்தினான்' என்கிறார்.

வாளையாம் நெடுங்கண் நல்லாள்
மணவினை தொடங்கு காலம்
நாளை யான் நமர்களோடு சூழ்ந்து
வந்து அறிவல் என்று
காளைபாற் பட்டு வெய்யோன்
குடதிசைக் கனபொன் குன்றில்
சூளிவாய் அருவி மாலைச்
சுடர்முடிச் சென்னி சேர்ந்தான். (1025)

### மகிழ மரக்கவசம்:

திவிட்ட நம்பியும் விதூடகனும் பூம்பொழிலுக்குச் செல்கின்றனர். ஒரு மகிழ மரத்தினடியில் மரத்தைச் சுற்றிக் கருமையாகக் கவசம் போன்று காணப்படுகின்றது. அதனைக் கண்ட விதூடகன் 'மகிழமரம் கவசம் அணிவது

ஏன்?' என்கிறான். அதற்கு திவிட்டன் கூறும் பதில் சுவை யாகவும் சிறப்பாகவும் உள்ளது. 'மகிழ மரத்திற்கு வயவு நோய் வருவது உண்டு. அந்நோய் அகலும் பொருட்டு மகளிர் தம் பவழம் போன்ற அழகியவாயினாலே சுவை யுடைய மதுவினை அவ்வடிமரத்திலே உமிழ்வர். மகளிர் உமிழ்ந்த தேன் மணத்தலாலே கரிய வண்டுகள் இம்மகிழ மரத்தின் அடிப்பகுதி மறையுமாறு மொய்த்துள்ளன. அவை கவசம் போல் காணப்படுசின்றன'என்கிறான். (1588,1589) வண்டுகள் மொய்த்திருப்பதைக் கவசமாக உவமிக்கும் ஆசிரியரின் திறம் எண்ணி மகிழ்கிறோம்.

*வரையினை எடுத்தல்:*

திவிட்டன் மலையினைப் பெயர்த்தெடுக்கின்றான். அவ்வாறு அகழ்ந்தெடுத்த அம்மலையின் கீழ் வாழும் பெரிய பெரிய பாம்புகள் தொங்குகின்றன. அக்காட்சி மலையின் வேர்களைப் போல் காணப்படுகின்றன.

*பிலங்களுன் உறைவன பெரிய நாகத்தின்*
*புலங்கெழு திரட்சிய புச்சம் தாழ்வன*
*அலங்கலான் எடுத்திட அகழ்ந்து எழுந்த அவ்*
*விலங்களின் விழுகதிர் வேர்கள் ஒத்தவே (1514)*

இத்தகைய அழகிய கற்பனை நயம் மிகுந்த நூலைப் படிப்போம்! சுவைப்போம்!

## ★ கிருட்டிணப்பிள்ளையின் உவமைநயம்

*உவமை:*

உவமை என்பது இரண்டு பொருள்களை ஒப்புமைப் படுத்தி இதே போல் அது என மற்றொன்றை விளங்க வைப்பதாகும். விளங்காத பொருளை உவமை நன்கு விளக்கிக் காட்டும். காணாத ஒன்றைக் காட்டுவதற்கு மட்டும் உவமை பயன்படுவதல்ல. அது கவிதை நலத்தை உயர்த்தவும் பயன் படுகிறது.

'உவமையற்ற கவிதை கவிதையே ஆகாது. அக் கவிதை புனையாத புகையுண்ட ஓவியம் போன்றது' என்கிறார் லையான் என்ற அறிஞர். 'உவமை என்பது இரண்டு சிறந்த பொருள்களை இணைக்கும் ஒப்பற்ற பாலம். இரு பேரூர்களைப் பிரிக்கும் ஆறுகளுக்குப் பாலம் இடுகிறோம். அப்பாலத்தால் ஆற்றின் இரு பக்கத்து நலன்களையும் ஒருசேர அல்லல் இன்றி அனுபவிக்க முடிகிறது. அது போன்று இரண்டு பொருள்களை நமக்குப் புலனாக்கி

மகிழ்வளிக்கும் பாலமே உவமை' என்பது அவர் கருத்து. இரட்சனிய யாத்திரிக நூலாசிரியர் எ. ஆ. கிருட்டிணப் பிள்ளை இவ்வுவமையை எவ்வாறு எடுத்துக் கையாள்கிறார் எனக் காண்போம்.

## *விணாகப் போன அறிவுரை:*

துன்பமலைச் சாரலில் பேதை, சோம்பல், துணிகரன் என்ற மூவர் உறங்கிக் கொண்டிருக்கின்றனர். அவர்களை எழுப்பி அறிவுரை பகர்கின்றான் கிறித்தியான். அவ் அறிவுரை கவிழ்த்த குடத்தின் உளுந்தே போல் அகத்திலிருந்து உருண்டு ஓடி விட்டனவாம்.

*வகுத்து வகுத்துச் சொல்லிய வாய்மை மதிகேடர்*
*பகுத்துணர்வில்லார் ஆதலின் அன்றோ பழுதென்ன*
*உகுத்தனர்! எல்லாம் கவிழ்த்த குடத்தின் உழுந்தே போல்*
*அகத்துறல் இன்றிப் போயது! இவர்க்கு உய்வு அரிதம்மா*

என்பார்.

இங்கு இராமாயணத்தில் ஒரு காட்சியை நினைவு படுத்திக் கொள்வோம். தாடகை என்ற அரக்கிமேல் இராமன் அம்பை விடுகிறான். அவ்வம்பு அவள் உடம்பில் ஊடுருவி அப்பால் போகிறது, எப்படி? 'கல்லா புல்லர்க்கு நல்லோர் சொன்னபொருள் எனப் போயிற்று.' இதனைக் கம்பர் மிக அழகாக,

*'சொல் ஒக்கும் கடிய வேகச்*
*சுடுசரம், கரிய செம்மல்*
*அல் ஒக்கும் நிறத்தினாள் மேல்*
*விடுத்தலும், வயிரக் குன்றக்*

*கல் ஒக்கும் நெஞ்சில் தங்காது*
*அப்புறம் கழன்று கல்லாப்*
*புல்லர்க்கு நல்லோர் சொன்ன*
*பொருள் என போயிற்று அன்றே'* (388)

என்று பாடுவார்.

## *மரங்களில் பூத்த மலர்கள்:*

கிறித்தியான் என்னும் மறைவாணன் துன்ப மலையை நெருங்கிக் கொண்டிருக்கிறான். அங்கே ஒரு பக்கமாக ஒரு வளமான சோலையைக் காண்கின்றான். அச்சோலையில் உயர்ந்த மரங்களில் பூக்கள் பூத்திருக்கின்றன. அதைக் காண்கிறார் ஆசிரியர். 'அடியார்களின் உள்ளத்தில் பக்தி மலர்ந்ததைப் போல சோலையின் உயர்ந்த கிளைகளில் வண்ண மலர்கள் மலர்ந்திருக்கின்றன' என்கிறார்.

*புண்ணியன் திருவடி மலர்க்கு அன்புசெய் புனிதர்*
*உண்ணிகழ்ந்த மெய்ப்பத்தியின் ஒள்ளிய செயல்போல்*
*வண்ண வான் தருக்குல மலர் நறுமணம் மலிந்து*
*கண்ணகன் புவி முழுவதும் நறுங்கடி கமழும்.*

## *விண்மீன்:*

ஆன்மீகன் துன்பமலையைக் கடந்து பின்னும் தொடர்ந்து வான்விட்டு வழியில் சென்று கொண்டிருக்கிறான். இரவு வருகிறது. விண்மீன்கள் தெரிகின்றன. கெடுப்பவர்கள் நெருங்கிக் கூடிக் கேடுபல செய்திடினும் நடுக்கம் தரக்கூடிய நோயினால் நலிவுற்றாலும் வேண்டுபவர்க்கு இறைவன் உதவி புரிவான் என்பதைப் போல ஆகாயம் எங்கும் விண்மீன் கூட்டங்கள் தெரிந்தனவாம்.

கெடுக்குநர் அடர்ந்து பல்கேடு சூழினும்
நடுக்குறு நோய்பல நலியுமேனும் கை
எடுக்குநர்க்கு இறையருள் இலங்குமாறு போல்
உடுக்கணம் விளங்கின உம்பர் எங்குமே

இவ்விண்மீன் நிறைந்த வானத்தைப் புரட்சிக்கவி பாரதிதாசன்.

மண்மீதில் உழைப்பார் எல்லாம்
வறியராம்! உரிமை கேட்டால்
புண்மீதில் அம்பு பாய்ச்சும்
புலையர் செல்வராம் இதைத்தன்
கண்மீதில் பகலில் எல்லாம்
கண்டு கண்டு அந்திக்குப்பின்
விண் மீனாய்க் கொப்பளித்த
விரிவானம் பாராய் தம்பி

என்று அழகாகப் பாடுவார். (அழகின் சிரிப்பு)

**கானகம்:**

பத்தி சொல்லி என்னும் பெண்மணி இயேசுவின் வாழ்க்கையை ஆன்மீகனுக்குச் சொல்லி வருகிறாள். ஒரு விரிந்த கானகம் பற்றிக் கூறுகிறாள். அக்கானகத்தில் விளங்கிய நிழல், இருள் தான் சூரியனுக்குத் தோற்றுவிட்டு அக்கானகத்தில் சென்று ஒளிந்து கொண்டதைப் போலிருந்தது என்று பாடுவார் பாளையங்கோட்டைப் பாவலர் கிருட்டிணப்பிள்ளை.

இருள்எலாம் கதிரவற்கு ஈடழிந்து போய்
ஒருவழி தொக்க உறைந்தென்ன ஓங்கிய
தருநிழல் கதுவிய தன் அம் தாது உகு
விரிமலர்ப் பரிமளம் வீசும் காவனம்.

அக்கால மதவாதிகள் மரணத்தீர்ப்பு வாங்கித்தர இயேசுவைப் பொத்தியுபிலாத்து என்னும் ஆட்சித் தலைவனின் அரண்மனைக்குக் கொண்டு போகின்றனர். அவரை அவர்கள் ஒன்றும் செய்திட முடியாது என அழகான உவமையால் விளக்குகிறார். 'வறட்சியான கிணற்றுக்குக் கடலை விழுங்கிட முடியுமோ?' என்று கேட்கிறார்.

'ஒண்ணுமோ வறுங் கூவலுக்கு உத்தியை ஒடுக்க'

## இயேசுவின் துன்பம்:

அவருக்குச் செந்நிற அங்கி அணிவித்துத் தலையில் முள் முடி அழுத்தினர். முகத்தில் காரி உமிழ்ந்தனர். அவருக்கு அணிவித்த செந்நிற அங்கி முருக்கமலர் போலச் செந்நிறமாக இருந்ததாம்.

*முன்னுடை களைந்ததொரு முருக்கு அலர்ந்தெனச்*
*செந்நிற அங்கிமேல் திகழச் சேர்த்தினர்.*

இச்செய்கையைக் கவிஞர் கண்ணதாசன் மனம் உருகிப் பாடுவார்

*முள்ளில் மகுடத்தைச் சூட்டினர் - ஒரு*
*மூங்கில் தடியையும் நாட்டினர் - அவர்*
*எள்ளி நகைத்தனர் சூழ்ந்தனர் - காறி*
*எச்சிலைத் துப்பினர் பாய்ந்தனர் - தமது*
*உள்ளங் கடுத்தவர் மண்டியில் - நின்று*
*'யூதரின் ராஜனே' என்றனர்-இயேசு*
*பிள்ளை முகத்தினில் குத்தினர் - கொச்சைப்*
*பேச்சுக்கள் ஆயிரம் பேசினர்!*

(இயேசு காவியம் பக்கம் 133)

என்பது அவர் உள்ளக் குமுறல்.

இயேசு பெருமான் சிலுவையைச் சுமந்து தெருத் தெரு வாகச் செல்கின்றார். அதனைக் கண்ட எருசலை நகர் மக்கள் தளர்ந்தனர், மகளிர் வருத்தினர். அம்மகளிர் கைகள் காந்தள் மலர்போல உள்ளதாம். முகம் தாமரை போலும், கண்கள் குவளை மலர் போலும் உள்ளதாம். அவர்களின் கண்களில் இருந்து வழியும் நீர் கண்ணீர் அல்ல முத்துக்கள். அவர்தம் பற்கள் முல்லைபோல இருக்கிறதாம். இவ்வுவமை களை வைத்துக் கொண்டு, ஓர் அவல நாடகத்தைக் காட்டு கிறார்.

*காந்தள் மலர் செங்கமல மலரைப் புடைப்பப்*
*பூந்தன் கருங்குவளைப் போது நீர் முத்து உகுப்பத்*
*தேந்தளவு தொக்க நறுஞ் சேதாம்பலை யலர்த்தி*
*மாதண்டலைக் குயிலின் மென்மொழியார் மாழ்கினர்.*

காந்தள் மலர்போலும் கைகள் கமல மலர் போலும் முகத்தில் அடித்துக் கொண்டனவாம். குவளை மலர் போலும் கண்களிலிருந்து முத்துக்கள் போன்ற கண்ணீர் சிந்தினவாம் முல்லைப் போன்ற வெண்பற்கள் இருக்க செவ்வாம்பல் போன்ற சிவந்த இதழ் விரித்து மகளிர் புலம் பினராம்.

## முத்திரையிட்ட கல்லறை:

இயேசு பெருமானின் திருவுடலைக் கல்லறைக்குள் வைத்தனர். கொலைஞர் கல்லறைக்குக் காவல் வைத்து அக் கல்லறைக்கு முத்திரையும் இட்டனர். மதியில்லார், எட்டுத் திசைகளையும் விண்ணுலகங்களையும் தமது உள்ளங் கையில் அடைத்துக் கொண்டோம் இனிதப்பிச் செல்ல முடியாது! என்று சொல்பவர்களைப் போல, கல்லறைக்குரிய கல் மூடியை வலிமையாக அடைத்து அதற்கு முத்திரை இட்டார்கள் என்று பாடுவார்.

'இட்டனர் முத்திரை ஏமம் உறத் தனி ஈமத்தின்
முட்டியடைத்த ஓர் கற்கதவத்தினை முற்றாக
அட்ட திகாந்தமும் அம்பரமும் இது ஓர் அங்கைக்குள்
இட்டணம் உய்விலை என்பவர் போல் மதி இல்லாரே'

*திங்கள்:*

கல்லறையில் இயேசு பெருமானை அடைத்த பிறகு வைகறை வந்தது. சந்திரன் வெளுத்தது. மெய்கண்ட இடத்தில் பொய்மை வெளுத்துப் போவதை போல வெண்ணிலா வெளுத்தது என்கிறார்.

'மெய்கண்ட இடத்துப் பொய்மை வெளுத்தென
வெளுத்தது இந்து
கைகண்ட களவின் ஆக்கம் கரந்தெனக்
கரந்த விண்மின்
பொய்கண்டு மருண்ட உள்ளம் போல்
ஒளி இழந்த தீபம்
மைகண்ட கங்குல் வாட்டும் வைகறை
கண்டு கண்டே

*மரணச் சூழல்:*

கிறித்தியான் தன் பயணத்தைத் தொடர்கிறான். மரணச் சூழலைச் சேர்கிறான். நரகத்தில் வீழ்ந்திருப்பவர் களைப்பற்றி கவி அழகாகக் கூறுகிறார். கையில் உள்ள விளக்கைப் போட்டு விட்டுக் கருங் குழியில் கவிழ்வார் போல வேத விற்பன நெறியைக் கைவிட்டு மரணப் படுகைகளில் வீழ்ந்து ஐயகோ, ஐயகோ என்று அலறுகின்றனராம்.

கையறு விளக்கைப் போக்கிக்
கடுங்குழி கவிழ்வார் போல

மெய்யுறத் திகழ்த்தும் வேத
விற்பன நெறி கைவிட்டு
மையிருள் படர்ந்து தொக்க
மரணப் படுகர் வீழ்வுற்று
ஐயகோ ஐயகோ என்று
அலறு பேரொலியும் கேட்டான்

கிறித்தியான் பயணத்தின் போது பாலை நிலத்தை அடைகிறான். அவ்வள நிலத்தைச் சேர்ந்த கிளை வழிச் செல்லுகிறான். இடி, மின்னல், மழை, ஏற்படுகிறது. அவ் வியற்கை நிகழ்ச்சி பற்றிக் கவிஞர் சிறப்பாகப் பாடுகிறார். கொடிய திகிலும் பல குழப்பமும் அடியார் உள்ளத்து அமளி யும் போல மின்னலும் பேரிடியும் தோன்றியதாம்.

கொடிய மாத்திகிலும் பல்குழப்பமும்
அடியர் உள்ளத்து அமளியும் போன்ம் எனத்
தடியும் பேரிடியும் தலைக் கூடுகார்
படியை மூடிப் பரந்தது அவ்வொல்லையே

*முடிவுரை:*

எ. ஆ. கிருஷ்ணப் பிள்ளையின் இலக்கியக் கடலில் மூழ்கிய போழ்து ஒருசில முத்துக்களை எடுத்து வந்தேன். மற்றதை நீங்களும் தேடுங்கள் கிடைக்கும்!

## ★ கன்னித் தமிழ் வளர்த்த கம்பன் அடிப்பொடி

கம்பன் அடிப்பொடி என அழைக்கப்படும் காரைக்குடி சா. கணேசன் அவர்கள் இன்று நம்மிடையே இல்லை. அவர் காரைக்குடியில் தோற்றுவித்த கம்பன் கழகமும், அவரால் கட்டப்பட்ட கம்பன் மணி மண்டபமும், தமிழ்த்தாய் கோயிலும் அவர் புகழைச் சொல்லிக் கொண்டிருக்கின்றன. அண்ணாரின் சேவைகளை நினைத்துப் பார்ப்பது ஒவ்வொரு தமிழ் மகனின் கடமையாகும்.

*பிறப்பு:*

கம்பன் அடிப்பொடி அவர்கள் 1908ஆம் ஆண்டு ஜுன் மாதம் 6ஆம் நாள் காரைக்குடியில் சாமிநாதன் அவர்களுக்கும், நாச்சம்மை ஆச்சிக்கும் மகனாகப் பிறந்தார். பள்ளியில் படிக்கும் போதே கணேசனாருக்குத் தமிழ்ப்பற்று

அதிகம். வாலிபப் பருவம் அடைந்ததும் நாட்டு விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டார். அதனால் பள்ளிப்படிப்பு பாதிக்கப்பட்டது. கணேசனாருக்கு மீனாட்சி ஆச்சி என்பவரை மணமுடித்து வைத்தார்கள்.

*அரசியல்:*

1936ல் காரைக்குடியில் நடைபெற்ற தமிழ்நாடு காங்கிரஸ் மாநாட்டின் செயலாளராக இருந்து மாநாட்டினை சிறப்பாக நடத்தினார். அம்மாநாட்டில் ஆங்கில அரசாங்கத்தால் அளிக்கப்பட்ட பட்டங்கள், பதவிகளைத் துறந்தவர்கள்தாம் காங்கிரஸ் உறுப்பினராகச் சேரத் தகுதி உடையவர்கள் என்றும், ஏழை எளிய மக்களுக்கு இலவச உணவு திட்டத்தையும் கொண்டு வர வேண்டும் என்றும் தீர்மானங்கள் கொண்டு வந்தார். 1957ல் ஆங்கில அரசாங்கம் அளித்த பட்டம், பதவிகளைத் துறக்காத ஒருவரைக் காரைக்குடி தொகுதி வேட்பாளராக நியமித்ததை எதிர்த்தார். காங்கிரசுக்கு எதிராகப் போட்டியிட்டார்.

1938ல் கானாடு காத்தானில் நடைபெற்ற காங்கிரஸ் பிரச்சாரக் கூட்டத்தில் கலந்து கொள்ளத் தலைவர்களுடன் சென்றார். ஆங்கில அரசு கூட்டம் போட்டால் சுட்டு விடுவோம் என்று அறிவித்தது. கூட்டம் நடைபெறாத வண்ணம் பலரைக் கொண்டு தாரை, தப்பட்டைகளை வாசிக்கச் செய்து இடையூறு செய்தார்கள். இதனைக் கண்ட சா. கணேசனார், 'எங்கே என்னைச் சுட முடிந்தால், சுடு பார்க்கலாம்' என்று வீர முழக்கமிட்டுச் சட்டையைக் கிழித்து எறிந்து விட்டுக் காங்கிரஸ் பிரசாரம் செய்தார்.

1941-42ஆம் ஆண்டுகளில் தனிநபர் சத்தியாக்கிரகம் ஆரம்பித்துச் சுமார் 588 மைல்களை 66 நாட்களில் நடந்து. காங்கிரஸ் பிரச்சாரம் செய்து, சென்னையில் கைது ஆனார்.

அலிபுரம் சிறையில் நான்கு மாதம் சிறைவாசம் அனுபவித்தார். 1942ல் மீண்டும் அலிபுரம் சிறையில் 6 மாத காலம் சிறைவாசம் அனுபவித்தார். 1962ல் சட்டமன்ற உறுப்பினராகவும், 1972ல் மேல்சபை உறுப்பினராகவும் இருந்து பணியாற்றினார்.

## கன்னித் தமிழ் வளர்த்த கணேசனார்:

1939 ஏப்ரல் 4ல் காரைக்குடியில் கம்பன் கழகம் என்ற பெயரில் ஒரு இலக்கிய நிறுவனத்தை ஆரம்பித்துப் பாரெல்லாம், கம்பன் புகழ் பரவ, மூல காரணமாக விளங்கினார்கள். கம்பனிடத்தில் அளவிட முடியாத அளவிற்கு ஈடுபாடும் பக்தியும் கொண்டிருந்தார். கம்பனுக்குத் தன்னையே தந்தவர்.

*வழியறியாக் கடையேற்கும் வழிகாட்டி வாழ்வளித்துப்*
*பழியறியா நெறிகூட்டிப் பைந்தமிழ்த்தாய் பதமலரில்*
*வழி தேறல் மாந்தவருள் மாக்கவிஞன் கம்பன் தன்*
*எழில் விரல்கள் பிடித்தெழுதும் எழுத்தாணி ஆகேனோ*

என்று பாடியவர்.

அது மட்டுமா? 'எம்பெருமான் இருந்தருளும் எழிற் பீடம் ஆகேனோ? கம்பனவன் போனகத்தை மகிழ்ந்து உண்ணும் பொன்வட்டில் ஆகேனோ? கம்பன் பால் பருகும் பொற்குவளை ஆகேனோ? கம்பன் அரை தழுவும் ஆடையதாய் ஆகேனோ? கம்பனவன் கையிலொரு குடையாக ஆகேனோ? கம்பனவன் துயில் கொள்ளும் மெத்தை என ஆகேனோ? கம்பனவன் பயன்படுத்தும் அடைப்பையாய் ஆகேனோ? கம்பன் கைப் பாக்குவெட்டி என விளங்கும் பாக்கியனாய் ஆகேனோ? கம்பனவன் தான் போடும் வெற்றிலையாம் தவமுடையேன் ஆகேனோ? கம்பனவன்

சுட்டுவிரல் தொட்டருளும் சுண்ணாம்பாய் ஆகேனோ?'
என்றெல்லாம் பாடிக் கசிந்துருகிக் கண்ணீர் மல்கிக் கடைசியாக,

'முந்தையர்கள் அருள்நெறியை முழுதுமதா சரித்து வரும்
பிந்தையர்கள் கடைப்பிடிக்கப் பெருநெறியை
நன்குணர்த்தும்
சந்தம் நிறை காப்பியத்தைத் தந்தருளும் கம்பனெனும்
எந்தைபிரான் சன்னிதியில் ஏதேனும் ஆகேனோ?'

என்ற அளவுக்கு தன் உள்ளக் கிடக்கையை வெளிப்படுத்து கிறாரே அங்கே தான் கம்பர் மேல் அவர் கொண்டிருக்கும் பக்தி புலனாகிறது.

கம்பர் மீது மட்டுமல்ல தமிழ் அன்னை மீதும் அவருக்கு உள்ள பக்தி எழுத்தில் வடிக்க இயலாது. தமிழின் மீது தனக்குள்ள காதலை வெளிப்படுத்தத் தமிழ்த்தொண்டர் தொகை பாடினார்.

ஆதிமுதல் தமிழாசான் அகத்தியனார்க் கடியேன்
அரன்முனிவும் அஞ்சாத நக்கீரற் கடியேன்!
ஓதுபுலன் அழுக்கற்ற உயர்கபிலற் கடியேன்
ஓங்குபுகழ் தாங்கிவளர் ஒண்பரணற் கடியேன்
தீதறுநல் சீத்தலையூர்ச் சாத்தனுக்கு மடியேன்
திருநிறைமாங் குடிமருதன் செழும்புலவற் கடியேன்
மூதறிஞன் மருதனின் நாகனுக்கு மடியேன்
மும்மைவளர் செந்தமிழ்த்தாய் முளரித்தாள் சரணே!

எனத் தமிழ்ப் புலவர்க்கெல்லாம் தன்னை அடியவனாக்கிக் கொண்டாரென்றால் அவர் தமிழ்ப்பற்றை ஏட்டில் வடித்திட இயலுமோ?

'யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல் வள்ளுவன் போல் இளங்கோவைப் போல் பூமிதனில் யாங்கணுமே கண்டதில்லை' எனப் பாடினான் பாட்டுக்கொரு புலவன் பாரதி. கம்பன் அடிப்பொடி அவர்களும் முப்பெரும் புலவர் களுக்கு வணக்கத்தைக் காணிக்கையாக்கி 'முப்பெரும் புலவர் வணக்கம்' பாடியிருக்கிறார். 'திருவழுந்தூர் வரு தேவே போற்றி! தமிழ்த்தவம் செய்த மாதவமே போற்றி! அருள்வழி உணர்த்து பேர் அந்தண போற்றி' எனக் கம்பனையும், 'திருமயிலை அவதரித்த தேவா போற்றி! திருக்குறளை உபகரித்த செம்மால் போற்றி! ஒரு பெரிய இறையுண்மை உரைப்பாய் போற்றி! உலகியலின் நிலை முழுவதும் உணர்ந்தாய் போற்றி ...!' என வள்ளுவரை யும், 'சேரர் குலந்தரு செல்வா போற்றி! வீர வஞ்சியின் விளக்கே போற்றி! குடக் கோச்சேரல் குரிசிலே போற்றி!' என இளங்கோவையும் வாழ்த்தி வணங்குகிறார்.

ஆயிரம் ஆண்டுகளாக இத்தமிழ்நாட்டில் கம்பன் பெயர் பேசப்பட்டாலும், காலட்சேபக்காரர்கள் கம்பனால் தம் வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்தாலும் கம்பனை இலக்கியக்கம்பனாகக் காட்டிய பெருமை அச்சட்டை யில்லாத் தியாகச் செம்மலையே சாரும்.

வாழ்க்கை முழுவதும் கம்பனை ஆராய்ந்தவர். 'அற மா? அரசியலா? இசையா? நடனமா? அறிவியலா? சட்ட மா? சாத்திரமா? சிற்பக் கலையா? சோதிடமா? அனைத்தும் கம்பராமாயணத்தில் உள்ளன என நாட்டுக்கு எடுத்துக் காட்டிய அறிஞர். கணேசனாருக்கு எல்லாம் கற்பித்த ஆசான் கம்பன்தான். அடிக்கடி கம்பனை, 'என்னப்பன், என் ஆசான், எந்தை பிரான் கம்பன்' என்பார். தம்முடைய பெயரையே 'கம்பன் அடிப்பொடி' என மாற்றிக் கொண்டவர்.

இன்று பட்டி தொட்டி எங்கும் பரவிவிட்ட பட்டி மண்டபத்தை முதன் முதலில் தொடங்கியவர் அவரே என லாம். பட்டி மண்டபம், நற்றமிழ் முற்றம் ஆகியவற்றைத் தொடங்கிப் புதுமுறையில் கம்பனைத் தமிழருக்கு எடுத்துக் காட்டியவர் 'பிறர் மனம் புண்படும்படி பேசுபவர்களுக்கும், பிறர்கைத்தட்ட வேண்டும் என்பதற்காக எதை வேண்டு மானாலும் பேசுபவர்களுக்கும், எடுத்த தலைப்பை விட்டுத் திசைமாறிச் செல்பவர்களுக்கும் கம்பன் விழாவில் இடம் கொடுக்க வேண்டாம்' என்பது அவரது அறிவுரையாகும். 'கம்பராமாயணத்தைப் பற்றி குறை கூறினாலும் பதிலுக்கு எதிர் வாதம் செய்யாதீர்கள்' எனக் கம்பன் கழகத்தாருக்குக் கூறுவார்.

### சாதிமத பேதமற்றவர்:

'வகுப்பு வாதம்-ஒரு பேய் என்று சொல்லுவார்கள். அது ஒரு பேய் மட்டுமில்லை. பிளேக், காலரா போன்ற ஒரு கொடிய பரவு நோய். அந்த நோய் இருக்கிற வரையில் எந்த நாட்டிலும் அமைதியைக் காண முடியாது' என்பார் (கட்டுரைக் களஞ்சியம் பக்கம் 58)

இச்சாதியை ஒழிப்பது எப்படி? அப்பேயை விரட்டுவது எப்படி? அவரே வழியையும் கூறுகின்றார். 'பொது ஸ்தா பனங்கள் எதுவும் ஜாதிமத அடிப்படையிலே நடைபெறா மல் பார்த்துக் கொள்ள வேண்டும். பிராமணாள் காபி ஓட்டல், முஸ்லிம் டீ ஓட்டல், இந்து ரெஸ்டாரண்ட், முஸ் லிம் ரெஸ்டாரண்ட் என்ற மாதிரி உள்ள போர்டுகள் தொங்க விடுவது சட்ட விரோதம் ஆக்க வேண்டும்.'

'இந்துக்கள் மெஜாரிட்டியாக இருக்கிற பகுதியிலே ஒரு தேர்தலுக்கு முஸ்லிம் ஒருவரை நிறுத்தி அவரை வெற்றி யடையச் செய்ய வேண்டும். முஸ்லிம் பெரும்பான்மையின

ராக இருக்கும் பகுதியிலே இந்துவை நிறுத்தி வெற்றி யடைச் செய்ய வேண்டும். இப்படியெல்லாம் செய்வதன் மூலம் மக்கள் உள்ளத்திலே சமரச மனோபாவத்தை எளி தாக வளர்க்க முடியும்.'

'ஒரு ஜாதிக்குள்ளே ஒருவரை ஒருவர் கல்யாணம் செய்து கொள்ளப்படாது என்று கூடச் சட்டம் செய்ய வேண்டும் என்றும் நான் ஆசைப்படுகிறேன். ஒரு மதத் திலே உள்ளவர்கள் பிற மதத்திலே கல்யாணம் செய்துக் கொண்டு இருவரும் தத்தம் மத அனுஷ்டானத்தையும், நம்பிக்கையையும் விடாமலேயே வாழ்வதற்கு சமுதாயமும் சட்டமும் அனுமதியளிக்க வேண்டும்'

(கட்டுரைக் களஞ்சியம் 60-63)

எவ்வளவு புரட்சிகரமான கருத்துக்களை வெளியிடு கிறார்! சாதிமத பேதமற்ற சமுதாயம் நிலவ வேண்டும் என்பதில் அவருக்கு எவ்வளவு ஆர்வம் உள்ளது! என் பதை நினைக்கும் போது நம் உள்ளம் உவகை கொள்கிறது.

*அறிஞர் பெருமகனார்:*

கம்பனடிப்பொடி அவர்கள் இலக்கியரசனையாளர், பேச்சாளர், எழுத்தாளர், கவிஞர், கதாசிரியர், ஆராய்சி யாளர், அஞ்சாநெஞ்சர், சிற்ப-கட்டிட வல்லுநர், கோயிற் கலை அறிஞர், இயல் இசை நாடகம் கற்றுணர்ந்தவர், அச்சுக்கலை உணர்ந்தவர், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், வரலாற்று அறிஞர், சோதிட கணித வரலாற்று அறிஞர் என்றெல்லாம் பல துறைகளில் சிறந்து விளங்கியவர்.

*குணநலன்கள்:*

கம்பனடிப்பொடி அவர்கள் ஒழுக்க சீலர், நேர்மை

யின் நெறியாளர், விருந்தோம்பலில் சிறந்தவர், செய்ந் நன்றி மறவாதவர், சிறந்த அரசியல் பண்பாளர், நகைச் சுவையாளர், நேரந் தவறாதவர் மேலும் பல பண்புகளைக் கொண்டவர்.

நேரந் தவறாமை என்பது அவர் வாழ்க்கையில் ஊறிவிட்ட ஒன்று. 9-30 மணிக்கு விழாத் தொடக்கம் என்றால் 9-29க்கோ 9-31க்கோ தொடங்க மாட்டார். சரியாக 9-30க்கு விழாவினைத் தொடங்கிவிடுவார். 'யார் வந்தாலும் வராவிட்டாலும் குறிப்பிட்ட நேரத்தில் விழாவினைத் தொடங்கிவிடுங்கள்' என ஏனைய கம்பன் கழகத்தாருக் கெல்லாம் கூறுவார்.

### முடிப்புரை:

கம்பன் புகழ்பாடி கன்னித் தமிழ் வளர்த்த அப்பெரியோன் நம்மிடையே இல்லையென்றாலும் அத்தகைய பணியைச் செய்ய ஒரு திருக்கூட்டத்தையே உருவாக்கி வைத்துவிட்டுச் சென்றுவிட்டார். அத்தகைய சான்றோனின் அடிச் சுவட்டைப் பின்பற்றிக் கம்பன் புகழ் பாடுவோம்! கன்னித் தமிழ் வளர்ப்போமாக!

முன்னமருட் கம்பனெனும் நாமம் கேட்டான்
　　மூர்த்தியவன் இராமகாதை முழுதும் கேட்டான்
பின்னருள்ள சான்றோர்கள் பேசக் கேட்டான்
　　பேர்த்துமவன் சேவடிக்கே பிச்சன் ஆனான்
அன்னையுடன் அத்தனுமே கம்ப னென்றான்
　　அவன் பெயராய்த் தன்பெயரை ஆக்கிக் கொண்டான்
தன்னை மறந் திட்டான்தன் நாமம் கெட்டான்
　　தலைப்பட்டான் சேர்ந்திட்டான் தலைவன் தாளே.

-சொ. சொ. மீ. சுந்தரம்-

## ★ தொழிலாளர் தலைவர் திரு. வி. க.

'சிற்றூரும் வரப்பெடுத்த வயலும் ஆறு
தேக்கிய நல் வாய்க்காலும் வகைப்படுத்தி
நெற்சேர உழுதுழுது பயன் விளைக்கும்
நிறை உழைப்புத் தோள்களெலாம் எவரின் தோள்கள்?
கற்பிளந்து மலைபிளந்து கனிகள் வெட்டிக்
கருவியெல்லாம் செய்து தந்த கைதான் யார்கை?
பொன் துகளைக் கடல் முத்தை மணிக்குலத்தைப்
போய் எடுக்க அடக்கிய மூச்சு எவரின் மூச்சு'

என்று புரட்சிக்கவி பாரதிதாசன் பாடினான். அத்தகைய தொழிலாளருக்காக அன்று தன் உழைப்பை முன் வைத்தார் திரு. வி. க.

### *பிறப்பு:*

'எங்கள் தந்தை' என்று துருக்கியரால் போற்றப்படும் கமால் பாஷா, அமெரிக்காவைச் சுதந்திர நாடகச்

செய்த ஜார்ஜ் வாஷிங்டன், சமதர்மப் புரட்சியை ரஷ்யா வில் நடத்தி வெற்றி கண்ட லெனின், 'நாங்கள் இந்தியா வை இழந்தாலும் இழப்போம் சேக்ஸ்பியரின் காவியங்களை இழக்க மாட்டோம்' என்ற பெருமைக்குரிய சேக்ஸ்பியர் இவர்களைப் போல திரு. வி. க. அவர்கள் ஓர் எளிய குடும் பத்தில் பிறந்தார், எளிய வாழ்வே வாழ்ந்தார்.

திரு. வி. க. அவர்கள் கூட்டத்திற்குச் சென்றால் ஒரு சிலரைப் போல் தாங்கள் வருவதற்கு உந்து வண்டி வைக்க வேண்டும் என நச்சரிக்க மாட்டார். எளிய மக் களைப் போலவே வரிசையில் பேருந்துக்காகக் காத் திருப்பார்.

ஒரு முறை இந்தியாவிலிருந்து ஓர் அன்பர் சோவியத் யூனியனுக்குச் சென்றார். ஓர் இடத்தில் வரிசையில் நிற்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. அவர் வரிசையில் நின் றார். நாம் இந்தியாவிலிருந்து எவ்வளவு பெரிய பதவியில் இருந்து வந்துள்ளோம், நம் பதவிக்குச் சிறப்பு தரவில்லை யே என்று வருந்திப் பின்னால் இருப்பவரிடம் கூறினார். அதற்குப் பின்னால் நின்றிருந்தவர், 'நான் இந்நாட்டின் தலைமை அமைச்சர் நானும் வரிசையில்தான் நிற்கிறேன்' என்றாரே பார்கலாம்! இதனைக் கண்ட நம் இந்தியருக்குப் பேச 'நா' எழவில்லை. அந்நாட்டின் சமதர்ம சமுதாயத் தை நினைத்து மகிழ்ந்து போனார்.

திரு. வி. க. இணையற்ற எழுத்தாளர்; கேட்டார் பிணிக்கும் பேச்சாளர்; அறநெறிப் பிறழாச் செம்மையாளர்! இதழாசிரியராகவும், நூலாசிரியராகவும் விளங்கியவர்.

அவர் மேடை ஏறிக் கண்ணைச் சிமிட்டி இடக்கைச் சுட்டுவிரலைக் காட்டிக் காட்டிப் பேசத் தொடங்கினால் அவருடைய உள்ளமே மக்களோடு பேசுவதாய் தோன்றும்.

உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாதவர். மனதில் தோன்றியதைத் தங்கு தடையின்றி எதிரில் இருப்பவருக்குக் கூறுவார். அவர் வாழ்நாள் எல்லாம் தமிழுக்கும், தொழிலாளருக்கும் தொண்டாற்றியவர். ‘என்னுடைய வாழ்க்கை முழுவதும் தொழிலாளர் இயக்க வளர்ச்சிக்குப் பயன்பட வேண்டுமென்று யான் கடவுளை வழுத்திய வண்ணம் இருக்கிறேன்’ என்கிறார். கூட்டத்தில் கூடி நின்று பேசுவது மட்டுமல்லாமல் செயலிலும் செய்து காட்டியவர். அரங்கத்தில் ஒன்று அந்தரங்கத்தில் வேறு ஒன்று என்பதை அறியாதவர்.

### *தொழிற்சங்கத் தோற்றம்:*

சென்னை சூளையில் ‘வெங்கடேசகுணாமிர்த வருஷிணி என்ற ஒரு சமயச் சங்கம் இருந்தது. அச்சங்கத்தின் அங்கத்தினர் பலரின் முயற்சியால் சென்னையில் தொழிலாளர் இயக்கம் தோன்றியது. அச்சபை அங்கத்தினர்களாகிய செல்வபதி செட்டியார், ஜி. இராமாஞ்சுலு நாயுடு ஆகியோர் திவான் பகதூர் கேசவப் பிள்ளை, திரு. வி. க. ஆகியோரோடு கலந்து பேசினர். 1918ஆம் ஆண்டு மார்ச் மாதம் 2ஆம்தேதி தொழிலாளர் நிலையை அறியும் எண்ணத்தோடு திரு. வி. க. அவர்கள் சூளையில் பல்லாயிரக்கணக்கான தொழிலாளரிடைச் சொற்பொழிவு நிகழ்த்தினார். பக்கிங்காம் மில், கர்னாடிக் மில், சூளைமில் ஆகியவற்றின் தொழிலாளர்கள் கலந்து கொண்டனர். இச்சொற்பொழிவு தொழிலாளரிடையே எழுச்சியை ஏற்படுத்தியது. தங்களுக்கென ஒரு சங்கம் காண அவர்களைத் தூண்டியது. அதன்படி 1918ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 27ஆம் நாள் சென்னை தொழிலாளர் சங்கம் தோற்றுவிக்கப்பட்டது.

திரு. வி. க. அவர்கள் தொழிலாளரிடையே எழுச்சியை உண்டாக்கிய போது அவருக்கும் திரு. செல்வபதி செட்டியாருக்கும், திரு. இராமஞ்சுலு நாயுடுவுக்கும், மற்ற

வருக்கும் அரசாங்கம் பல தொல்லைகள் தந்தது. அதனைப் பற்றி திரு. வி. க. வாயிலாகவே கேட்போம்! 'ஒருவன் ஒரு மரத்தின் கீழ் நின்று ஓர் உலர்ந்த கொடியைப் பற்றி நிற்குங் காலத்து அம்மரத்தின் அடியைச் சூழ்ந்து மூடியிருக்கும் புதரிலுள்ள பாம்புகள் பணம் (படம்) விரித்தாடித் தன்னைக் கண்டு சீறுவதையும், ஒரு புலி தன் எதிரே பாய்ந்து வருவதையும், ஒரு சிங்கம் உற்று நோக்குவதையும், கண்ணுற்றுத் தான் பற்றி நின்ற கொடியையே துணை கொண்டு மரமேற நினைத்த நிலையையே அடியேன் அதுகாலை உற்ற நிலைக்கு ஒப்பிடலாம். (தமிழ்த் தென்றல் பக்கம் 376, 377) என்கிறார்.

## தொழிலாளர்

உடல் உழைப்பைத் தருபவன் மட்டும் தொழிலாளி அல்ல. அறிவைச் செலவிடுபவனும் தொழிலாளிதான் என்பது அவர் எண்ணம். ஆண்டவனை அடைய விரும்புவோர் பயன கருதாத் தொண்டினைச் செய்ய வேண்டும். அதனால் தான் அக்காலச் சான்றோர் 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்றனர். இராமகிருஷ்ண மடத்தார் இன்று கூட புயலால் பாதிக்கப்பட்டோருக்கும், நோயினால் துன்புறுவோருக்கும் பயன் கருதாமல் உதவுகின்றனர். கண்ணனும் கீதையில் 'கடமையைச் செய்; பலனை எதிர்பாராதே' என்றான்.

இன்றைய முதலாளி உலகத்தைப் பற்றித் தமிழ்த் தென்றலாம் திரு. வி. க. படம் பிடித்துக் காட்டுகிறார். 'இப்பொழுது உலகம் பெரிதும் முதலாளிகள் வசம் கட்டுப்பட்டுக் கிடக்கிறது அரசு முதலாளி வசமிருக்கிறது; சபைகள் அவர்கள் வசமிருக்கின்றன; பத்திரிக்கைகள் அவ்வகுப்பாரிடமிருக்கின்றன; தொழிற்சாலைகளும் அக்கூட்டதாரிடம் இருக்கின்றன. முதலாளிகள் ஆட்சியால் சண்டை, கலகம்,

குழப்பம் முதலிய கொடுமைகளுக்கு உலகம் இரையாகி வருகிறது' (தமிழ்த்தென்றல் பக்கம் 168) 'எல்லாத் தொழில்களும் நாட்டுடைமை ஆக்கப்பட்டு தொழிலாளர் வசம் வர வேண்டும். அரசாங்கம், சபைகள், பத்திரிகைகள் அனைத்தும் தொழிலாளர் வசமிருப்பின் நாடு நலம் பெறும் தொழிலாளர் நலம் பெறுவர்.'

## *முதலாளி, தொழிலாளி பூசல்*

முதலாளி-தொழிலாளி சண்டை என்றைக்கும் தீர்ந்தபாடில்லை. முதலாளி-தொழிலாளி சண்டையில் போர் புரிபவர் இரு பக்கமும் தொழிலாளரே! போர் புரிவதற்கு வேண்டிய கருவிகள் செய்வோனும் தொழிலாளியே. இதனைக் கண்ட திரு. வி. க. 'தொழிலாளர் துணையைக் கொண்டு தொழிலாளி இரத்தத்தைச் சிந்தி தொழிலாளி உழைப்பால் முதலாளி கொழுத்த செல்வம் பெறுகிறான். இஃதென்ன கொடுமை? உழைப்பு ஒருவருடையது. பலன் மற்றவருடையதா? என்கிறார்.

'முதலாளி தொழிலாளிப் பிரிவை உண்டாக்குவது பொருட்செல்வம். பொருட்செல்வம் எல்லார்க்கும் பொதுவாக வகுக்கப்படின் முதலாளி தொழிலாளி எனும் வேற்றுமையை ஒழிந்து விடும்' என்பது அவர் கண்ட முடிவு.

## *தொழிலாளரும் அரசாங்கமும்*

'தொழிலாளருக்கும், முதலாளிக்கும் இடையில் அரசாங்கத்தார் தலையிடாமல் இருந்தால் எப்பொழுதோ சமாதானம் பிறந்திருக்கும்' (பக்கம் 139) 'தொழிலாளர் இயக்கத்தை அரசியல் கட்சிகளில் நுழைய விடக்கூடாது. தொழிலாளர் இயக்கம் அரும்பி வரும் இந்நாளில் இவ்வியக்கத்திடைக் கட்சிகளையும், பகைமைகளையும் கலப்பது

நல்லதல்ல. அதனால் அவ்வியக்கம் வெம்பி இடையில் பட்டுப் போகும்!' (பக்கம் 383) என்கிறார்.

தொழிலாளர் தலைவர் திரு.வி.க. இன்று நம்மிடையே இல்லை. 'இனி தொழிலாளர் இயக்கம், கொடுமை, அடக்குமுறை என்னும் அரண்களை நீறுபடுத்திச் சமத்துவம் எனும் கோட்டையப் பற்றிச் சுதந்திரம் என்னும் அரியாசனம் ஏறிச் சகோதரத்துவம் என்னும் கொடியைப் பறக்க விடும்' என்னும் கனவு கண்டாரே அத்தகைய கனவை நினைவாக்குவது தான் நமது கடமை.

ஏழைத் தொழிலாளிக் கென்றும் துணைநின்று
வாழும் தமிழின் வளம்பெருக்கி - ஊழியங்கள்
செய்யப் பிறந்த திரு. வி. க. சென்றடைந்தான்
தையலொரு பாகனிரு தாள்.

என கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர் மறைவிற்கு மனம் உருகி பாடுகின்றார்.

## ★ பண்ணை மறந்த யாழ்கள்

*அரசனின் சிறப்பு:*

சங்க காலத்தில் அரசன் தெய்வமாகக் கருதப் பட்டான். உயிராகக் கருதப்பட்டான். 'திருவுடை மன்ன ரைக் காணின் திருமாலைக் கண்டேனே' எனத் திருவாய் மொழி கூறும் 'மனிதருள் நான் அரசன்' எனக் கீதையும் சொல்லும்.

'நெல்லும் உயிர் அன்றே நீரும் உயிர் அன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்' (புறம் 186)

எனப் புறநானூறு புகல்கின்றது. உலகிற்கு அரசன் உயிர் என்று பலர் கூறி வந்துள்ளனர்; ஆனால் கம்பரோ அரசன் உடல், உலகு உயிர் எனக் கூறுகின்றார்.

'உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்' [177]

ஆம், நாம் உயிரைக் காக்க உடம்பை எவ்வளவு பாதுகாப்பாக வைத்துக் கொள்கிறோம்.? அவ்வுடலில் உயிர் இருக்க வேண்டுமானால் உடம்பை நோய், நொடி இல்லாமல் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். மக்கள் நலமாக வாழ வேண்டுமானால் மன்னன் நலமாக இருக்க வேண்டும். மக்கள் மன்னனை நன்றாகப் பாதுகாக்க வேண்டும். அவ்வுயிர் இல்லையென்றால் உடலுக்கு மதிப்பில்லை. மக்கள் இல்லையென்றால் மன்னனுக்கு மதிப்பில்லை. ஆகவே தான் மன்னனை உடலாகவும், மக்களை உயிராகவும் கம்பர் கூறுகிறார்.

இவ்வளவு சிறப்புமிக்க அரசன் குடிகளைக் கண்கள் போலக் காப்பாற்ற வேண்டும். ஆடுங் கடைமணி நாவசையாமல் அக்கால அரசர்கள் அகிலத்தைக் காத்தனர்.

*'வையம் இன்புறின் மன்னன் இன்புறும்*
*வெய்யது ஒன்றுறின் தானும் வெய்துறும்'*

எனச் சூளாமணி கூறுவது போல் மன்னர்கள் வையத்தைக் காத்தனர். கண்ணுக்கு இமை, என்ன உரிமையோடு இசைந்துள்ளதோ அன்னவாறே மண்ணுக்கு மன்னரும்.கண்ணிற்கு ஏதேனும் துன்பம் நேர்ந்தால் இமை விரைந்து காக்கும். அதுபோல நாட்டுக்கு ஏதேனும் துன்பம் நேர்ந்தால் அரசன் விரைந்து அதனை நீக்க வேண்டும்.

*கண்ணைக் காப்பது கவிந்துள இமையன்றி அயலே*
*நண்ணி யுள்ளன நயந்துடன் காக்குமோ? பிறந்த*
*மண்ணைக் காப்பது வந்ததில் பிறந்தமண் குலத்தோர்க்கு*
*ஒண்ணுமே அன்றி ஒழிந்துளோர் செய்வரோ? உரிமை*

என 'வீரபாண்டியம்' கூறும்.

இத்தகைய மன்னரைப் பிரிய நேரும் பொழுது மக்கள் துயரம் கொண்டவர். மன்னன் பிரியும் பொழுது தம் உயிரே போவது போல் துன்பம் அடைந்தனர். மன்னனுக்கு மக்க ளிடம் இருக்கும் நல்லபெயரை அவன் நாட்டைவிட்டுப் பிரியும் போதோ அல்லது அவன் இறந்தவுடனோ அறிந்து கொள்ளலாம்.

பண்டைய காலத்தில் மன்னனைப் பிரிந்த மக்கள் எவ்வாறு துயரடைந்தார்கள் என்பதைக் காண்போம்.

சேரன் பெருஞ்சேரலாதனும், சோழன் கரிகால் பெரு வளத்தானும் போர் செய்கின்றனர். சோழன் எறிந்த வேல் எதிரியின் மார்பில் தைத்து ஊடுருவிப் பின்புறம் செல் கின்றது; தன் மார்பில் ஊடுருவிய வேலைப் பிடுங்குகிறான். அது முதுகு வரையில் சென்றதால் முதுகுப் புண் உண்டா கிறது. அதனால் நாணமடைந்து வடக்கிருக்கச் செல்கின் றான். அதனால், மக்கள் மட்டுமல்ல, அஃறிணைப் பொருள் களும் எவ்வாறு இருந்தன என்பதைப் படம் பிடித்துக் காட்டுகிறார் கழாத்தலையார் என்ற புலவர்.

கழாத்தலையார் சேரமான் குடக்கோ நெடுஞ்சேர லாதனும் சோழன் வேற்பஃறடக்கைப் பெருநற்கிள்ளியும் பொருது விழ்ந்தது கண்டு மனம் வருந்திப் பாடியவர். இருங்கோவேளின் முன்னோரில் ஒருவன் இவரை இகழ்ந்த தால் அவனது அரையம் என்னும் நகரம் பாழ்பட்டது. இவர் சேரமான் பெருஞ்சேரலாதனைப் பாடிய பாட்டில் இவருடைய துயரத்தின் எல்லையைக் காணலாம்.

'அரசர் பெருமான் வாளுடன் வடக்கிருந்தான். அதனால், எங்கள் நாட்டிலே முழவுகள் ஒலிப்பதை மறந்

தன! யாழ்கள் பண்ணை மறந்தன! பானைகள் பாலின்மை யினால் கவிழ்ந்து நெய்கடைதலை இழந்தன!. வண்டுகள் மதுவை உண்ணாது ஒழிந்தன! உழவர் ஓசையை வயல்கள் இழந்தன! ஊர் திருவிழாவை இழந்தது'.

*'மண் முழா மறப்ப, பண் யாழ் மறப்ப*
*இருங் கண் குழிசி கவிழ்ந்து இழுது மறப்ப,*
*சுரும்பு ஆர் தேறல் சுற்றம் மறப்ப,*
*உழவர் ஓதை மறப்ப. விழவும்*
*அகலுள் ஆங்கண் சீறூர் மறப்ப'* [புறம் 65]

என்கிறார்.

*சிவகன்:*

கட்டியங்காரன், 'சீவகனாகிய செட்டி மகனை விரைவில் கொணர்க' என்று மதனன் என்பவனையும் சில வீரர்களையும் அனுப்புகிறான். அவர்கள் சென்று சீவகன் இருக்குமிடத்தை வளைத்துக் கொண்டனர்.அதனை அறிந்த சீவகன் கொதித்து எழுகின்றான். போருக்குத் தயாராகின்றான் இன்னும் ஒரு வருடம் வரை கட்டியங்காரனிடத்துக் கோபம் கொள்ளாது இருப்பேன்' என்று முன்பு ஆசிரியரிடத்துக் கூறியதை நினைக்கின்றான். அமைதி அடைகின்றான். கந்துக்கடனும் சுநந்தையும், 'அரசனுக்கு அடங்கி ஒழுகுதல் ஆண்மை' என்கின்றனர். அதனாலும் சீவகன் தன் வீரத்தை வெளிப்படுத்தவில்லை. விசும்பு இடையில் கோள்கள் இடத்தில் உறையும் ஒளியணிந்த மதியம் அதனைக் கைவிட்டு நிலத்தே நடப்பது போல அக்கட்டியங் காரக் குழுவுடன் சென்றான். அதனைக் கண்ட மாந்தர் நிலையை தண்டமிழ்ப் புலவனாம் திருத்தக்க தேவர் நமக்குக் காட்டுகிறார்.

திருத்தக்க தேவர் சோழர் குலத்து உதித்துக் கல்வியில் வல்லவராய்த் தம்மத சித்தாந்தமாகிய ஆருகத சமய உண்மையறிந்து துறவு பூண்டு இருந்தவர். இவர் மதுரை நகரடைந்து சங்கப் புலவர்களுடன் பழகி அளவளாவி இருக்கையில் சங்கத்தவர்கள், 'உங்கள் சமயத்துப் புலவர்கள் விட்டு நூல் கூறவல்லாரேயன்றிக் காமநூல் கூறவல்லவர் அல்லர்' எனத் தேவர், அங்ஙனமன்று, அதனை வெறுத்துச் செய்திலர்' என்றார். 'அது உண்மையாயின் நீர் ஒரு நூல் செய்க!' என்றனர். அதன்படி சீவக சிந்தாமணி நூல் செய்தார் என்பர். மற்றும் இவர் 'நரிவிருத்தம்' பாடினார். இவர் திருவள்ளுவர் இருந்த மயிலை நகரத்தில் அவர் காலத்தில் இருந்தார் என்றும் கூறுவர். தேவர் மாந்தர் நிலையைப் படம் பிடித்துக் காட்டுவதைக் காண்போமாக!

பூமாலையைக் கொண்ட அழகிய கூந்தலை உடைய மாதர் மனமுருகிக் கடலின் முத்துச் சிந்துவன போலக் கண்ணீரையுகுத்து அழுதனர்.

*கோதை கொண்ட பூஞ்சிகை*
*கொம்மை கொண்ட வெம்முலை*
*மாது கொண்ட சாயலம்*
*மடந்தையர் மனம் கசிந்து*
*ஓதம் முத்து உகுப்பபோல்*
*உண்கண் வெம்பனி யுகுத்து*
*யாது செய்கம் ஐய என்று*
*அன்பு மிக்கு அரற்றினார்* (1102)

'கெடுதியுற்ற மயில்போல வருத்தமுற்ற அரிவைப் பருவ மகளிர், மலர் மலர்ந்த மாலையான் அழகு கெடும் எனின் உடம்பில் வாழும் உயிரே நீ போ! உடம்பே நீயும் இப்பொழுது அழிவாயாக' என்று உரைத்து வேலனைய

நெடுங் கண்கள் நீரைச் சொரிய அழகிய வயிற்றிலே அடித்துக் கொண்டனர்.

பூவலர்ந்த தாரினான்
பொற்பு வாடும் ஆயிடிற்
போ வுடம்பு வாழ்உயிர்
பொன்று நீயும் இன்று எனா
வீகலந்த மஞ்சைபோல்
வேல் நெடுங்கண் நீர்மல்க
ஆகுலத்து அரிவையர்
அவ்வயிறு அதுக்கினார் [1104]

### மிதிலை மருகனும் மக்கள் துயரும்:

ஆழி சூழ் உலகம் யாவும் பரதனையே ஆட்சி செய்யும் படிச் சொல்லிவிட்டுத், தாழ் இருஞ்சடைகள் தாங்கித் தாங்க அருந்தவம் மேற்கொள்ள இராமன் வனம் செல்லப் போகிறான் என்பதை அறிந்த மக்கள் பட்ட துயரத்தைக் கம்பன் படம் பிடித்துக் காட்டுகிறான்.

வார் ஆர் முலையாரும், மற்றுள்ள மாந்தர்களும், ஆராத காதல் அரசர்களும், அந்தணரும் தயரதனைப் போல் விழ்ந்தனர். புண்ணில் நெருப்பு பட்டாற் போலப் பதை பதைத்தனர். அவர்கள் கண்களிலிருந்து புறப்பட்ட கண்ணீர் கடலைப் போலப் பெருகிவிட்டது. அழுகையொலியோ தேவர் உலகம் வரையிலும் எட்டிவிட்டது.

பெண்களின் அணிகலன்கள் கழன்று வீழ்ந்தன. மங்கலக் கயிறும் வீழ்ந்தது. கூந்தல் அவிழவும் கூற்றனைய கண்கள் சிவக்கவும் நிலத்திலே வீழ்ந்தார்கள்.

'மாதர் அருங்கலமும் மங்கலமும் சிந்தி, தம்
கோதை புடைபெயர கூற்று அனைய கண் சிவப்ப
பாதமலர் சிவப்ப தாம் பதைத்துப் பார் சேர்ந்தார்.
ஊதை எறிய ஒசி பூங்கொடு ஒப்பார்' 1699)

ஆறு அறிவு படைத்தவர்கள் அழுதனர். அதற்குக் குறைந்த அறிவு படைத்த அனைத்தும் அழுதன. கிளிகளும் நாகணவாய்ப் பறவைகளும் அழுதன. வீடுகளில் உள்ள பூனைகள் அழுதன; பசுக்கள் அழுதன; அதன் கன்றுகள் அழுதன; அன்று மலர்ந்த மலர்களும் அழுதன; கள் ஒழுகும் சோலைகளும் அழுதன; யானை குதிரைகளும் அழுதன என்கிறார்.

ஆவும் அழுத; அதன் கன்று அழுத, அன்று அலர்ந்த
பூவும் அழுத; புனல் புள் அழுத, கள் ஒழுகும்
காவும் அழுத; களிறு அழுத; கால் வயப்போர்
மாவும் அழுத; அம் மன்னவனை மானவே (1703)

'தேர் ஓட நீறு ஆகி சுண்ணம் நிறைந்த தெரு எல்லாம் கண் நீர் ஆறு ஆகி ஓடின' என்பான் கம்பன். இராமனிடத்து அவர்கள் கொண்டிருந்த பாசம்தான் என்னே! பற்றுதான் என்னே!

### பாண்டவரும் பாசமிக்க மக்களும்:

'கோயில் பூசை செய்வோர் சிலையைக் கொண்டு விற்றது போல, ஆயிரங்களான நீதியை உணர்ந்த தருமன், தேயம் வைத்து இழந்தான்' உடன் பிறந்தோரை வைத்து இழந்தான். தன்னைத்தான் வைத்து இழந்தான். வேள்விப் பொருளினை புலைநாயின் முன்மென்றிட வைப்பவர் போல, ஆள்விற்றுப் பொன் வாங்கி செய்த பூனை ஓர் ஆந்தைக்குப்

பூட்டுதல் போல் துருபதன் மகளைத் திட்டத் துய்நன் உடன்பிறப்பை வைத்திழந்தான்.

எல்லாம் வைத்து இழந்தவன் புண்ணியத்தைப் பணய மாக வைத்து மீண்டும் உரிமையைப் பெறுகின்றான். தன் உடன் பிறந்தோருடனும், உத்தம தேவியுடனும் காட்டிற் குச் செல்லுகின்றான். கண்டவர் கண்ணீர் வடிக்கின்றனர்.

கருணையை நீக்கியுள்ள நால்வர் உள்ளம் தவிர ஏனையோர் மனம் மயக்கங் கொண்டு தளர்ந்து புலம்பினர். குழந்தைகளும் பாலுண்ணவில்லை; அவ்வத்தினாபுரத்தி லுள்ள மக்கள் நெருப்புப் போல பெருமூச்செறிந்து வருந் தினர். தனித்தனியே புலம்பினர்' என்பார் வில்லிப்புத்தூரார்.

*ஒழிவு செய் கருணை நால்வர்*
*உள்ளமும் ஒழிய ஏனை*
*வழுவு அறு மன்னர் உள்ளம்*
*மம்மரோடு அயர்ந்து விம்ம*
*குழைவினால் நுகர்தல் இன்றி*
*கொற்ற மாநகரி மாக்கள்*
*தழல்என உயிர்த்து மாழ்கி*
*தனித்தனி புலம்ப லுற்றார்*

(சூது போர்ச் சருக்கம் 282)

*முடிப்புரை:*

'நாடு எனக்கென்ன செய்தது?' என்பதை விட 'நாட்டுக்கு நாம் என்ன செய்தோம்?' என எண்ணிப் பார்ப் பதுதான் அறிவுடைமை. நாட்டின் பால் அன்பு வைப்போம்! நாட்டுப்பற்றே நலம் பயக்கும்!

★ ‘நா’நயம்’

இன்றைய இளைஞர் நாளைய தலைவர், அத்தகைய தலைவராக ஆகப்போகும் இளைஞர்கள் இன்சொல்லும் அடக்கமும் இரு கண்களாகப் பெற்று இருக்க வேண்டும்.

இன்று மேடைகளில் நாகரிகம் என்பது செல்லாக் காசாக ஆகி வருவதைக் காண்கிறோம். கருத்துக்களைத் தாக்குவதற்குப் பதிலாகத் தனிப்பட்டவரின் வாழ்க்கையை அலசி ஆராய்வதைப் பார்க்கின்றோம். இடக்கரடக்கல் இல்லாமல் போய்விட்டது. ஆபாசமான வார்த்தைகளும் கொச்சைச் சொற்களும், தெருச் சண்டை வார்த்தைகளும் தான் மேடையில் களி நடம் புரியக் காண்கிறோம். இந்நிலை நீடித்தால் நாடு என்ன ஆகும்? நாட்டுப்பற்றுடைய அனைவரும் அச்சப்படவேண்டி உள்ளது.

*வாய்மொழியே காட்டிவிடும்:*

முன்னேற்றப் பாதையில் காலடி எடுத்து வைக்கப் போகும் இளைஞர்கள் ஒவ்வொருவரும் இனிமையாகப்

பேசப் பழகிக் கொள்ள வேண்டும். நாம் பேசக் கூடிய பேச்சி லிருந்து தான் மற்றவர்கள் நம்மைப் பற்றித் தெரிந்து கொள்வார்கள். 'சந்தனம் நிறைந்த செப்பும், சாணம் உள்ள கூடையும் அவ்வவற்றின் மணம் காட்டி விடுதல் போலப் பொல்லாரையும், நல்லாரையும் அவரவர் வாய்மொழியே காட்டிவிடும்' என்பார் வேதநாயகர்.

*சந்தநிறை செப்பிறைவை சாணமுள தென்னக்*
*கந்தம தெவர்க்குநனி காட்டிவிடல் போலும்*
*நிந்தனையு ளாரினிய நீர்மையின ரென்ன*
*முந்துவலர் வாய்மொழி மொழிந்துவிடு மன்றோ*

(நீதி நூல் இனிய சொற்கூறல் 3)

பணிவுடையவனாகவும், இன்சொல் வழங்குபவனாகவும் ஆதலே ஒருவனுக்கு அணிகலனாகும்; மற்றைய அணிகள், அணிகள் அல்ல'' என்பார் பொய்யாமொழியார்.

*பணிவுடையான் இன்சொலன் ஆதல் ஒருவர்க்கு*
*அணியல்ல மற்றுப் பிற* [95]

என்பது அவர் வாக்கு.

## இன்சொல்லால் மகிழும்:

'சூரியனைக் கண்டால் அமைதியாய் இருக்கும் கடல், குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரனைக் கண்டால் பொங்கி மேல் எழுகின்றது. அது போலவே உலகத்தார் இன்சொல் பேசுகின்றவர்களைக் கண்டால் மகிழ்ச்சியடை கிறார்கள். கடுஞ்சொல் பேசுகின்றவர்களைக் கண்டால் வருத்தம் அடைவார்கள்' என்கிறார் பிரபுலிங்க லீலை பாடிய சிவப்பிரகாச சுவாமிகள்.

,இன்சொலால் அன்றி இருநீர் வியனுலகம்
வன்சொலால் என்றும் மகிழாதே·பொன்செய்
அதிர்வளையாய்! பொங்காது அழற்கதிரால் தண்ணென்
கதிர்வரவால் பொங்கும் கடல்' [நன்னெறி 18]

உலகில் உள்ளோர் குயிலோசையை விரும்பிக் கழுதை ஓசையை வெறுப்பது போல, இன்சொல்லை விரும்பி வன்சொல்லை வெறுப்பர் என்பது நீதிவெண்பா கூறும் நீதி யாகும்.

மென்மதுர வாக்கால் விரும்பும் சகம் கடின
வன்மொழியினால் இகழும் மண்ணுலகம் - நன்மொழியை
ஓதுகுயில் ஏதங்கு உதவியது கர்த்தபந்தான்
ஏது அபராதம் செய்தது இன்று? [நீதி வெண்பா-4]

## இன்சொல்லே பேசுக:

எவரும் இன்சொல்லைத்தான் விரும்புவர். வன்சொல்லை விரும்பார். இல்லாள் கூட இனிமையாகப் பேசுவதைத் தான் விரும்புவாள். கோபமாகப் பேசும் கணவனைக் கண் டால் அவளுக்கு எமபயம்தான்! வீட்டில் கூட இன்சொல் லையே பேசுதல் வேண்டும்.

ஒருநாள் என்னுடைய நண்பர் வீட்டிற்குச் சென்றிருந் தேன். நான் சென்றபோது நண்பர் உணவருந்திக் கொண் டிருந்தார். உணவில் உப்பில்லை. அதற்காக அவர் மனை வியைக் கடிந்து கொள்ளவில்லை, வையவுமில்லை, நையப் புடைக்கவுமில்லை! என்ன செய்தார்? மனைவியிடம் 'வீட் டில் உப்பு இல்லையென்றால் முன்னதாகச் சொல்லி இருக் கலாமே!' என்றார். அந்நண்பர் குடும்பத்தில் கூட வன் சொற்களைப் பயன்படுத்தியதில்லை. அவரைப் போல் நாமும் ஏன் மென்மையாகப் பேசிப்பழகிக் கொள்ளக் கூடாது?

'பிறர்க்குத் துன்பம் விளைக்கும் சிறுமையிலிருந்து நீங்கிய இனிய சொற்கள் வழங்குவோனுக்கு மறுமைக்கும் இம்மைக்கும் இன்பம் தரும்' என்கிறார் செந்நாப் போதார்.

'இனிமையான சொற்கள் இருக்க வன்சொற்களைப் பேசலாமோ? நம் எதிரில் பழுத்த பழம் இருக்கக் கசப்பான காயைச் சுவைப்போமா?' என்று மேலும் கூறுவார் திருவள்ளுவர்.

*இனிய உளவாக இன்னாத கூறல்*
*கனியிருப்பக் காய்கவர்ந் தற்று* [100]

### *தமிழாசிரியர் சினம்:*

மூடன் ஒருவனும் புலவர் ஒருவரும் சந்தித்தனர். மூடன் புலவரை எழுத முடியாத சொற்களால் அவரைத் தாக்கினான். புலவர்க்கு அவன் கோபமாகப் பேசுகிறான் என்பது மட்டும் தெரியும். அவன் பேசிய சொற்களை இது வரை கேட்டதில்லை. இவர் வாயிலிருந்து அத்தகைய சொற்கள் வந்ததுமில்லை. 'அம்மூடனிடம் நாமும் பதிலுக்குக் கோபமாகப் பேச வேண்டும்' என நினைத்தார். என்ன சொற்களைக் கொண்டு அவனை வைவது? அவருக்குத் தெரிந்ததெல்லாம் காய்களின் பெயர்தான். ஆகவே அதனைக் கொண்டே அவனிடம் கோபமாகப் பேசினார். என்னவென்று?

'வெண்டைக்காய், சுண்டைக்காய், கத்தரிக்காய், மாங்காய், தேங்காய் .............'

இவ்வாறு கோபமாகப் பேசினார். ஆகவே நாமும் வன்சொற்களை நீக்கி மென் சொற்களையே பேசுதல் வேண்டும். இளைஞர்களுக்குச் சிறு வயதிலிருந்தே இனிமை

யான சொற்களைப் பேசப் பழக்கப்படுத்த வேண்டும். அதற்கு என்ன செய்ய வேண்டும்? பெரியவர்கள் குழந்தைகள் எதிரில் தீய சொற்களைப் பேசாமல் இருக்க வேண்டும்.

### *மெய்ப்பொருள் கண்டு வாழ்பவர்:*

'பிறர் வைத சொற்களை இன்சொல்லாகக் கொள்பவனும், நெய்வார்த்த சோறு எனக் கூழை மதித்து உண்பவனும், கசப்பில் இனிப்பைக் கண்டு வாழ்கிறவனும் ஆகிய இம்மூவரும் உண்மையைக் காண்கிறவர்' எனத் திரிகடுக ஆசிரியர் நல்லாதனார் கூறுவார்.

*வைததனை இன்சொல்லாக் கொள்வானும் நெய்பெய்த*
*சோறென்று கூழை மதிப்பானும் - ஊறிய*
*கைப்பதனைக் கட்டியென் றுண்பானும் இம்மூவர்*
*மெய்ப்பொருள் கண்டு வாழ்வார்* (48)

### *விண்ணோர் ஏற்பர்:*

தன் இல்லம் நோக்கி வரும் விருந்தினர் யாவரிடத்தும் இன்சொல்லால் பேசுதல், கலந்து உறவாடல், இருக்கையுதவல், அறுசுவை உண்டி அளித்தல், கடுஞ்சொல் ஒழித்து மென்சொல் வழங்குதல் ஆகிய பண்புகளைக் கொண்ட ஒருவனை, வானோர் விருந்தினராய் ஏற்றுக் கொள்வர்' என்கிறார் ஏலாதி பாடிய கணிமேதையார்.

*இன்சொல் அளவில் இடம்இனிது ஊண் யாவர்க்கும்*
*வன்சொல் களைந்து வகுப்பானேல் - மென்சொல்*
*முருந்து ஏய்க்கும் முள்போல் எயிற்றினாய் நாளும்*
*விருந்து ஏற்பர் விண்ணோர் விரைந்து*

வசிட்டன் இராமனுக்கு அரச நீதிகளைக் கூறும்போது, 'ஒரு மன்னன் இனிய சொல்லினைச் சொல்பவனா

கவும், பிறருக்கு இல்லை என்று சொல்லாமல் கொடுப்பவனாகவும் நல்ல எண்ணமுடையவனாகவும் நல்ல செயல் உடையவனாகவும், வாய்மை உடையவனாகவும், வெற்றியை உடையவனாகவும் நீதிநெறி கடவாதவனாகவும் இருந்தால் அத்தகைய மன்னருக்கு எவராலும் கேடு உண்டாகாது' என்கிறார்.

*இனிய சொல்லினன் ஈகையன் எண்ணினன்*
*வினையன்; தூயன்; விழுமியன்; வென்றியன்;*
*நினையும் நீதிநெறி கடவான் எனில்*
*அனைய மன்னற்கு அழிவும் உண்டாம் கொலோ* [1424]

*நா நயம்:*

மக்களை விலங்கிலிருந்து பிரித்துக் காட்டுவது பேச்சு, இப்பேச்சினை மனிதன் பெற்றிருக்கின்றான். அருமையாகக் கிடைத்துள்ள இப்பேச்சினைத் தகுதியாகப் பேச வேண்டும்; இனிமையாகப் பேசவேண்டும். அவ்வாறு பேசுகிறவன் தேவனாகிறான். அவன் எல்லாச் செல்வங்களையும் பெற்றவனாகின்றான். மக்களால் சிறப்பிக்கப்படுகிறான்; புகழின் உச்சியை அடைகிறான். ஆம் 'நா' நயம் இருந்தால் 'நாணயம்' தானே வரும்.

நாக்கு முனையில் மகிழத்தக்க இன்சொல் உண்டாகுமானால், மலர்மகளும், இனிய சொல்லினைப் பேசக்கூடிய நல்ல பெரியோரும் வந்து சேருவர். அவ்வாறு இல்லாமல் அந்நாக்கு நுனி வன்சொற்கள் பயின்று வலிதாகுமானால் திருமகளும் சேரமாட்டாள். அதனால் மரணம் வரும்' என்று நீதிவெண்பா கூறும்.

*நாவின் நுனியில்நயம் இருக்கில் பூமாதும்*
*நாவினிய நல்லோரும் நண்ணுவார் - நாவின்நுனி*
*ஆங்கடின மாகில் அத்திருவும் சேராள்முன்*
*ஆங்கே வருமரண மாம்* [17]

முழுமுதற் பாவலராம் வள்ளுவப் பெருந்தகை சொல்லைப் பற்றி குறிப்பிடுகையில், 'ஆக்கமும் கேடும் சொல்கின்ற சொல்லால் வருதலால் ஒருவன் தன்னுடைய சொல்லில் தவறு நேராமல் காத்துக் கொள்ள வேண்டும்' என்கிறார்.

*ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்*
*காத்தோம்பல் சொல்லின் கண் சோர்வு* [642]

'நாம் ஒருவருக்கு எப்பொருளும் கொடுக்க முடியாமல் போயினும், இன்சொல்லாவது கூறுதல் வேண்டும். இன்சொல்லும் சொல்லாது ஒழியின் அது பெருந்தீவினையாய்' முடியும்' என்கிறார் நீதிநெறி விளக்கம் பாடிய குமரகுருபர அடிகள்.

*ஈகை யரிதெனினும் இன்சொலினும் நல்கூர்தல்*
*ஓஒ கொடிது கொடிதம்மா - நா கொன்று*
*தீவினைக் கம்மியனால் வாய்ப்பூட்டு இடப்படின்மற்*
*றாவா இவரென்செய் வார்?* [68]

*மூன்று:*

நான் பள்ளியிறுதி வகுப்பில் படிக்கும் பொழுது கடைசி நாள் பிரிவுரைக் கூட்டத்தில், எங்கள் தமிழாசிரியர் சுருக்கமாக, 'நாவைப் போல் இரு, ஆவைப் போல் இரு, பூவைப் போல் இரு' என்றார்.

வலிமையான பற்களுக்கு இடையே இருந்து கொண்டு அவை நன்றாக மென்று தரச் சுவைத்து நாக்கு உண்கிறது. அதுபோல தீயவர்கள், வலிமையுடையவர்கள் நடுவே நாம் இருந்தாலும் அவர்களைப் பகைத்துக் கொள்ளாமல், அவர்களால் பயன்கள் பெற்று வாழ வேண்டும். அவர்களிடம் நயமாக நடந்து கொள்ள வேண்டும்.

நாக்கு, பற்கள் என்ற கோட்டைக்குள் இருந்தால் எவ்வித தீங்கும் நேராமல் நன்றாக இருக்கும். அக்கோட்டை யைத் தாண்டினால் நாக்கு துன்பத்திற்கு உள்ளாகும் அது போல் மனிதன் கட்டுப்பாட்டிற்குள், ஓர் எல்லைக்குள் வாழ்ந்து வரவேண்டும். அக்கட்டுப்பாட்டை மீறினால் துன்ப மடைவான்.

வேறு ஒன்றையும் சிந்திக்கலாம், காது, கண், மூக்கு ஆகியவை நம் கட்டுப்பாட்டிற்குள் அடங்குவது கடினம். ஆம், தீய சொற்கள் காதில் விழும். அச்சொற்களைக் கேட்டுத்தான் ஆக வேண்டும். துர்நாற்றம் நம் மூக்கில் தானாகவே வந்து நுழையும், அதைத் தடுக்க முடியாது. ஆனால் நாக்கு நம் கட்டுப்பாட்டை மீறி அசையாது. அதனை நம் விருப்பப்படி ஆட்டிப்படைக்கலாம். அதனால் தான் நாக்கு உள்ளே வைக்கப்பட்டது. ஆகவே சொற்களை அளந்து பேச வேண்டும். இனிமையாகப் பேசுதல் வேண்டும். அது நம்மால்தான் இயலும் என்ற கருத்தும் இதில் அடங்கியுள்ளது.

அடுத்து 'ஆ' வைப் போல் இருத்தல் வேண்டும். 'ஆ' என்றால் பசு எனத் தெரியும். பசுவைப் போல் சாது வாக இருக்க வேண்டும் என்றும் கூறலாம். பசு எளிமையான புல்லையும் நீரையும் அருந்தி இனிய பாலைத் தருகின்றது. அதுபோல நாமும் எளிமையாக இருந்து மற்றவர்களுக்குப் பயனுள்ளவர்களாக வாழ வேண்டும்.

இறுதியாகப் 'பூ' பூவானது மணம் வீசி வண்டுகளை யெல்லாம் தன்னிடம் வரவழைக்கின்றது. சில பூக்கள் மணம் தராவிட்டாலும் கவர்ச்சியாகவும், பல நிறங்களைக் கொண்டும் இருக்கின்றன அதனால் வண்டுகள் அப்பூக் களிடம் செல்கின்றன. அதுபோல் நீயும் இனிமையாகப்பேசி மற்றவர்களை உன்னிடம் நட்புக் கொள்ளுமாறு செய்ய

வேண்டும். அடக்கமுடைமை, வாய்மை, ஒழுக்கம் ஆகிய வற்றைக் கொண்டு மற்றவர்களைக் கவர்தல் வேண்டும்.

நாம் இனிமையாகப் பேசுதல் வேண்டும். மற்றவர்கள் மனம் வருந்தாதபடிப் பேச வேண்டும். இவ்வாறு இருந்தால் மனிதருள் மாணிக்கமாகலாம். மண்ணுலகம் போற்றும் வகையில் உயரலாம்.

*வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்*
*தெய்வத்துள் வைக்கப் படும்* (குறள் 50)

## ★ விடுதலைப் போரில் சில தழும்புகள்

*தண்ணீர் விட்டோ வளர்த்தோம், சர்வேசா இப்பயிரைக்*
*கண்ணீரால் காத்தோம்; கருகத் திருவுளமோ?*

எனப் பாடுவார் பாட்டுக்கொரு புலவன் பாரதி, ஆம்! ஆனந்த சுதந்திரத்தைப் பெற அடிமைத்தளையை உடைத்தெறிய மக்கள் பட்ட அல்லல் கொஞ்சமல்ல. தொண்டர்கள் பட்ட துன்பம் சொல்லி முடியாது. பாரதத்தாயை விடுவிக்க அன்று சிந்திய இரத்தம் எவ்வளவோ? இரத்தத் திலகமிட்டு மண்ணை முத்தமிடத் தம் பிள்ளைகளை அனுப்பிய வீராங்கனைகள் எத்தனையோ பேர்! நாட்டில் நடக்கும் கொலை, கொள்ளைகளுக்கு எல்லாம் இந்திய மக்களைக் காரணம் காட்டி தண்டனை வழங்கப்பட்டது. செய்தித் தாள்களில் வன்முறையைத் தூண்டியதாகக் குற்றம் சாட்டித் தண்டனை தரப்பட்டது.

ஆங்கில ஆதிக்கத்தை எதிர்த்த மக்களுக்கு எதிராக துப்பாக்கிகள் வெடித்தன, பீரங்கிகள் முடுக்கி விடப்பட்டன, தூக்குக்கயிறுகள் தொங்கவிடப்பட்டன; நாடுகடத்தல் சர்வசாதாரணமாக்கப்பட்டன.

## இராணுவத்தினரின் அதிகாரம் :

இராணுவத் தளபதிகள் படைப்பயிற்சிக்கு வரும் இந்துக் களின் காதுகளில் கடுக்கன் அணியக்கூடாது, நெற்றியில் திருநீறோ, திருமண்ணோ அணியக் கூடாது என்றும் முகமதியர்கள் தங்கள் தாடியை முற்றிலும் களைந்து விட வேண்டும், மீசைகூட அவர்கள் குறிப்பிடும் அளவுதான் இருக்கவேண்டும் எனவும் ஆணையிட்டனர். உள்ளத் துணர்ச்சிகளை ஒளியாமல் வெளியிட்ட வேலூர் வீரச் சிப்பாய்களை வெள்ளையர் சென்னைக் கோட்டைக்கு இழுத்துச் சென்று போலி விசாரணை நடத்தி தொள்ளா யிரம் சாட்டையடிகள் கொடுத்தனர். அவர்களின் பதவிகள் பறிக்கப்பட்டன.

மதுரையில் கதர் உடுத்தியிருந்த ஒருதொழிலாளி மறியலில் ஈடுபட்டார். அவர் கொடுமையாகத் தண்டிக்கப் பட்டார். அப்பகுதி போலீஸ் இன்ஸ்பெக்டர் வீட்டிற்கு அத்தொழிலாளி கொண்டு செல்லப்பட்டார். அங்கு மீண்டும் அவர் அடிக்கப்பட்டார். அவர் தலையில் மண்ணெண்ணெய் ஊற்றி நெருப்பு வைத்தார்கள்.

## நீலனின் கொடுமை:

சுதந்திரப் போர் புரியும்படி இந்திய சிப்பாய்களைத் தூண்டிவிட்டதற்காக 'மங்களபாண்டே' என்ற இளஞ்சிங் கத்தைப் பிரிட்டிஷார் தூக்கிலிட்டனர். 1857ல் ஜெனரல் நீலன் என்ற கொடியவனால் மக்கள் பட்ட துன்பங்களை

ஏட்டில் வடிக்க இயலாது. சுதந்திரத் தாகம் கொண்டவர் களை அடக்க படைகளை ஏவி விட்டான். அப்படைகள் ஊர்களைக் கொள்ளையடித்தன; தீ வைத்தன; கண்ணில் கண்ட இந்தியர் அனைவரையும் சுட்டுத்தள்ளின; எதிர்ப் பட்ட இந்தியர்களைச் சாலையோரத்து மரங்களில் 3,6,8,9 போன்ற வடிவங்களில் உடலை வளைத்து, ஒடித்துக்கட்டி தொங்கவிட்டனர். அக்கொடியோன் நீலன் வயதானவர் களைக் கொன்றான்; இளைஞர்களைக் கொன்றான்; குழந்தைகளைக் கொன்றான்; தாயிடம் பால்குடித்துக் கொண்டிருந்த பச்சிளங் குழந்தைகளையும் கொன்றான் நூற்றுக் கணக்கான மங்கையர்களை மானபங்கப் படுத்தி தீயிலிட்டுப் பொசுக்கினான்.

1908 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் முஜபர்பூரில் மாவட்ட நீதிபதியாக இருந்த 'கிங்க்ஸ்கோர்டு' என்ற ஆங்கிலேயர் மீது வீசிய குண்டு இரண்டு அந்திய நாட்டுப் பெண்கள் மீது விழுந்தது. அதற்காக 'குதிராம் போஸ்' என்ற இளைஞன் தூக்கிலிடப்பட்டான். 'யுகாந்தர்' என்ற செய்தித்தாளில் பலாத்காரம் பிரசாரம் செய்யப்பட்டன என்று அதன் ஆசிரியரும் சுவாமி விவேகானந்தரின் சகோதரரு மான பூபேந்திரநாத்தத்தருக்கு நீண்டகாலம் சிறைத்தண் டனை விதிக்கப்பட்டது.

### ஜாலியன் வாலாபாக் படுகொலை:

'ஜாலியன் வாலாபாக்' படுகொலையைப்பற்றி நாம் அனைவரும் அறிவோம். மைதானத்தில் இருபதினாயிரம் ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் கூடி இருந்தனர். 'ஜெனரல் டயர்' என்ற அதிகாரியின் வெறியினால் 400 பேர் மரணமடைந்தனர். சுமார் 2000 பேர் படுகாயம் உற்றனர். கூட்டத்தில் காயமடைந்து கீழே விழுந்து துடிப் பவர்களுக்கு அன்று இரவு முழுவதும் யாதொரு உதவியும்

அளிக்கப்படவில்லை. ஜெனரல் டயரின் வெறித்தனத்தைப் பாராட்டி அப்பொழுது கவர்னராக இருந்த 'மைக்கேல் ஒட்வியர்', 'நீர் செய்தது சரி, உபகவர்னரும் உம்முடைய செயலை ஆதரிக்கின்றார்' என்றானாம். அதற்கு அத் தீயவன் 'தோட்டாக்கள் மட்டும் தீர்ந்திராவிடில் இன்னும் மக்களைச் சுட்டு வீழ்த்தியிருப்பேன்' என்றானாம்.

அப்பாதகனின் நிர்வாகத்தில் அமிர்தசரசு மக்கள் தீயிலிட்ட புழுப்போல் துடித்தனர். நீர் வசதியும் மின்சார வசதியும் மறுக்கப்பட்டன. குற்றவாளி எனக் கூறப்பட்டவர்கள் பொது இடத்தில் வைத்து சவுக்கால் அடிக்கப்பட்டனர். 'மக்கள் வீதிகளில் மார்பு தரையில் படும்படி ஊர்ந்து செல்ல வேண்டும்' என்ற ஆணை பிறப்பிக்கப்பட்டது. இராணுவ அதிகாரிகள் நியமித்த விசாரணைக் கமிஷனில் 298 பேர் கலக சம்பந்தமாகக் குற்றம் சாட்டப்பட்டனர். 218 பேர் தண்டிக்கப்பட்டனர். 51 பேருக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. 46 பேர் நாடுகடத்தப்பட்டனர்.

### *சில்லரை தேவதைகள்:*

கர்னல் ஜான்சன், கர்னல் ஒப்ரயன் பாஸ்வொர்த் ஆகிய சில்லரை தேவதைகள் செய்த கொடுமைகளை வார்த்தைகளினால் வடிக்க இயலாது. எட்டு மணிக்குமேல் வீதிகளில் நடப்பவர்கள் சுடப்பட்டனர், சவுக்கால் அடிக்கப்பட்டனர், சிறையில் தள்ளப்பட்டனர். மூடியிருந்த கடைகளைத் திறக்காவிட்டால் கடைக்காரனை வெறித்தனமாகச் சுட்டனர். அவர்கள் கடையைச் சூறையாடினர். சுவர்களில் ஒட்டப்பட்ட இராணுவ விளம்பரங்கள் கிழிக்கப்பட்டிருந்தால் அப்பகுதி மக்களைத் தண்டித்தனர். மாணவர்களையும் அப்பாவிகள் விட்டு வைக்கவில்லை. அம்மாணவர்கள் ஒரு நாளைக்கு நான்கு தடவை காவல் நிலையத்தில் கையெழுத்திடவேண்டும் என்றனர். இந்தியர்களுக்கு உரிமையான

வாகனங்கள் காவலர்களிடம் ஒப்புவிக்கப் படவேண்டும். இதுமட்டுமா?

தன்வீட்டு வாசலில் பசுவிடம் நின்று கொண்டிருந்த ஒரு வயதானவனை, எட்டு மணிக்குமேல் வீதியில் இருந்த குற்றத்திற்காக சவுக்கால் அடித்தனர். கிராம அதிகாரி ஒருவர் பொது இடத்தில் மரத்தில் கட்டிவைத்து அடிக்கப் பட்டார். இவ்வளவு கொடுமைகளைக் செய்த கர்னல் ஜான்சன்துரை லாகூரை விட்டுப்போகும் பொழுது அங்குள்ள ஐரோப்பியர்களால், 'ஏழைகளின் அன்பர்' எனப்பட்டம் சூட்டிக் கௌரவிக்கப்பட்டான்.

## *வரியோவரி:*

வரி கொடுக்கவில்லையென்றாலும் மக்கள் கடுமை யாகத் தண்டிக்கப்பட்டனர். அவர்கள் பொருள்கள் ஏலம் விடப்பட்டன. 1922ல் குண்டூர் மாவட்டத்தில் ஒரு கிராமத் தில் சில ஆடுமாடுகளைப் பறிமுதல் செய்ய ஒரு போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் சென்றார். ஒரு விவசாயி அக்காவலரிடம் 'கன்றையும், மாட்டையும் பிரிக்கவேண்டாம்' என்றார். அவ்வளவுதான். பொறுக்குமா அதிகாரிக்கு? துப்பாக்கியைத் தூக்கினார். உயிரிழந்தான் விவசாயி.

## *ஊர்வலத்திற்குத் தடை:*

காங்கிரஸ் கொடியையோ, தலைவர்கள் படத்தையோ எடுத்துச் செல்லக்கூடாதென்று அதிகார வர்க்கம் ஆணை பிறப்பித்தது. 1923ஆம் ஆண்டு நாகபுரியில் தேசிய ஊர் வலத்தில் காங்கிரஸ் கொடியைக் கொண்டு போகக்கூடா தென்று போலிசார் 144வது பிரிவின் கீழ் தடையுத்தரவு பிறப்பித்தனர். 'சேத்ஜம்னாலால் பஜாஜ்' என்பவர் தேசியக் கொடியை ஏந்திச் சென்றார். அவர் கைது செய்யப்பட்டார். அவருக்கு விதித்த அபராதத் தொகையை வசூலிக்க

'பஜாஜின்' மோட்டார் ஏலம் விடப்பட்டது. 1929ல் கிழக்கு கோதாவரியில் உள்ள வடபள்ளியில் காந்தி படத்தைத் தேரில் வைத்து ஊர்வலம் சென்றனர். கோபமுற்ற காவலர் மக்கள் மீது குண்டுகளைப் பொழிந்தனர். அதில் நால்வர் இறந்தனர். பலர் காயமுற்றனர். தடியடிகள் நடத்தப் பட்டன.

## துன்புற்ற தலைவர்கள்:

தொண்டர்கள் மட்டும் அல்ல; தலைவர்களும் தொல் லைக்கு ஆளாயினர். சுதந்திரப் போராட்டத்தில் கலந்து கொண்ட தலைவர்கள் அனைவரும் அடக்குமுறையினால் அடக்கப்பட்டனர். ஆங்கில அரசு அவர்களுக்கு தொல்லை கொடுத்தது. அத்தலைவர்களுள் 'லாலாலஜபதிராய்' என்பவர் ஒருவர். நாட்டிற்காக நாடு கடத்தல், சிறைவாசம் ஆகியவற்றை அனுபவித்தவர். துப்பறியும் போலீசார் இவ ருக்கு மரணவேதனை தரும்படியான துன்பங்களைக் கொடுத் தனர். ஒரு போலீஸ் அதிகாரி இவர் மார்பில் தடிகொண்டு தாக்க அதன் விளைவாக இவர் 1929ல் இறக்க நேரிட்டது.

'மகாராட்டிர நாட்டின் முடிசூடா மன்னன்' எனப் பாராட்டப்பட்டவர் 'லோகமான்யபாலகங்காதர திலகர்' பதினெட்டு மாதச் சிறைத்தண்டனை பெற்றவர். அதிகார வர்க்கத்தினரால் அடிக்கடி துன்புறுத்தப்பட்டவர்களில் இவரும் ஒருவர்.

இப்படி தலைவர்களும், தொண்டர்களும் அல்லல் பட்டு, அவதிப்பட்டு உரிமையைப் பெற்று நமக்குத்தந்தனர். கிடைத்த உரிமையைப் பேணிக்காப்போம்! உயர்வு அடைவோம்!

★ *இவ்வரலாற்றுக்கட்டுரை உருவாகத் துணைநின்ற நூல்கள் :*
*சுதந்திரப் போரில் வடஆர்க்காடு மாவட்டம் (மலர்)*
*காங்கிரஸ் மகாசபை சரித்திரம்.*

## பேரரசு நூல் வெளியீட்டுக்குழு

தமிழ்த் திருவாளர்கள்:

★ பெரும்புலவர். சிவசங்கரனார்,
அண்ணாசாலை, ஆர்க்காடு.

★ பி. எம். நாமதேவ்,
70, உத்தமர் காந்தி சாலை, சென்னை-34.

★ ஏ. எஸ். ஏ. பரமசிவம்,
88, லாங்கு பசார், வேலூர்-4.

★ டாக்டர். த. குமரகுரு எம்.பி., பி.எஸ்.,
குமரன் மருத்துவமனை, வேலூர்-6.

★ எஸ். என். குப்புசாமி,
தலைவர், கம்பன் கழகம், வேலூர்-6.

★ நடிப்புச்செல்வர் அரிமா. ஜெ. அண்ணாமலை,
தலைவர், ஜே. ஏ. நாடகமன்றம், ஆரணி.

★ கே. என். இராமச்சந்திரன்,
தலைவர்,பன்னாட்டுத் தமிழுறவு மன்றம், காட்டுப்பாடி.

★ கே. ஏ. ஜி. சவுந்தரராஜன்,
193, பெரியகடைத்தெரு, கும்பகோணம்.

★ ச. உலோ. சச்சிதானந்தம்,
காந்திநகர், வேலூர்-6.

★ த. சுப்பிரமணி,
முன்னாள் சார்பதிவாளர், கிராமணித்தெரு
கண்ணமங்கலம்.

★ இராம பத்மநாபன் எம்.ஏ., எம்.எட்.,
தலைமை ஆசிரியர், அ. மே. நி. பள்ளி,
விண்ணம்பள்ளி.

★ வெ. சோலைநாதன்,
23, கஸ்தமேட்டுத் தெரு, வேலூர்.

★ எம். ஆர். முருகையன்,
தலைவர், ஊராட்சி மன்றம், ஒண்ணுபுரம்.

★ தேனி. முருகேசன்,
செயலாளர், இலக்கிய மன்றம், தேனி.

★ வி. எஸ். இரமேஷ்குமார் பி.ஏ ,
95, மெயின் பசார், வேலூர்-4.

★ க. இராசு பி.ஏ.,
27, மண்டி வீதி, வேலூர்-4.

★ வா. சு. இராமச்சந்திரன்,
92, மண்டி வீதி, வேலூர்-4.

★ இரா. ஈசுவரப்பன்,
126, கடைவீதி, ஆர்க்காடு.

★ எல். ஆர். நரசிம்மன்,
இராணி & கோ, கண்ணமங்கலம்.

★ எஸ். சுந்தரராசன்,
மேலாளர், இந்தியன் வங்கி, அ. கோ. படவேடு.

★ தீ. இலிங்கையன் எம்.ஏ.,பி.எஸ்ஸி..பி.டி.,
தலைமை ஆசிரியர், அ.மே நி. பள்ளி, அணைக்கட்டு.

★ எச். எஸ். எம். சேக்மீரான்,
செயலாளர், இசுலாமிய இளைஞர் கழகம், வேலூர்.

★ வா. அ. சிவராமன்,
தலைவர், ஊராடசி மன்றம், வாழியூர்.

★ த. தவமூர்த்தி எம்.ஏ ,பி.லிட்.,
தலைவர், ஊராட்சி மன்றம், கல்குப்பம்.

★ சி. அ. வேலு,
தலைவர், ஊராட்சி மன்றம், 5 புத்தூர்.

★ கவிஞர். மா. சோதி பி.லிட்.,
25, கலவை சாலை, ஆர்க்காடு.

★ எம். கலையரசன் எம்.காம் ,பி.ஜி.எல்.,
இராஜம் மெடிகல்ஸ், கண்ணமங்கலம்.

★ க. சானகிராமன்,
உதவி விதை அலுவலர், நடுத்தெரு களம்பூர்.

★ ஆர். சுப்பராயன்,
2, பஜார் தெரு, புதுப்பாளையம்.

★ இரா. சீனிவாசன், பி.எஸ்ஸி.,
நிறுவனத்தலைவர், காந்தி நகர் ஜேஸிஸ், வேலூர்-6.

★ வெ. கிருட்டிணமூர்த்தி,
பாரத சொற்பொழிவாளர், மேல்பள்ளிப்பட்டு. தி.ச.மா.

★ முத்து. இராமமூர்த்தி எம்.ஏ.பி.எட்.,
செயலாளர், கம்பன் கழகம், காஞ்சிபுரம்.

★ தேவ. மாணிக்கவேலு எம்.ஏ.பி.எட்.,
காளசமுத்திரம், [வழி] கண்ணமங்கலம்.

★ அ. ம. பச்சையப்பன்,
தலைவர், ஊராட்சி மன்றம், அனந்தபுரம். தி. ச. மா.

★ இராச. அண்ணாமலை எம்.ஏ.எம்.எட்.,
தலைவர், இளங்கோ இலக்கிய மன்றம்,
சமால்புரம். வ.ஆ.அ.மா.

★ மா. துரைசாமி எம்.ஏ.,பி.எஸ்ஸி.,எம்.எட்.,
சந்தவாசல், தி. ச. மாவட்டம்.

★ அ. சம்பத் பி.ஏ ,
தலைவர், ஊராட்சி மன்றம், காளசமுத்திரம்.

★ அறிவுச்சுடர் எம்.ஏ.,பி.எட்.,
செயலாளர், பன்னாட்டுத் தமிழுறவு மன்றம்,
காட்டுப்பாடி.

★ இராச. கோவிந்தராசு எம்.ஏ.,எம்.எட்.,
அ. கோ. படவேடு, [வழி] சந்தவாசல்.

★ வே. விசுவேசுவரன் எம்.ஏ.,எம்.எட்.,
முதுகலைப்பட்டதாரி ஆசிரியர்,
அ. மே. நி. பள்ளி, போளூர்.

★ கு. சரவணன் பி.எஸ்ஸி.,பி.எட்.,
15, குறுக்குத்தெரு, கண்ணமங்கலம்.

★ ப. வெங்கடேசன் எம்.ஏ.,எம்.பில்.,எம்.எட்.,
வசந்தபுரம், வேலூர்.

★ ந. சங்கரநாராயணன்
பாரத மிகுமின் நிறுவனம், இராணிப்பேட்டை.

★ கோ. நாராயணசாமி பி.எஸ்ஸி.,பி.எட்.,
அரசுயர் பள்ளி, கம்மவான்பேட்டை.

★ சி. பிரேம்நாத்,
சக்தி கெமிக்கல் ஏஜென்சி, சந்தவாசல்.

★ வெ. கணேசன்,
வேங்கடபதி அரிசி ஆலை சின்ன அய்யம்பாளையம்

★ த. நெடுஞ்செழியன்,
வாழியூர், (வழி) ஒண்ணுபுரம்.

★ க. உமாபதி,
சிற்பக் கலைஞர், வாழியூர், (வழி) ஒண்ணுபுரம்.

★ மா. சி. இராசேந்திரன் எம்.ஃபாம்.,
மருந்து ஆய்வாளர், மாளிகைப்பட்டு. தி.ச.மா.

★ கவிஞர். வேலூர் ம. நாராயணன் எம்.ஏ.,
பாவேந்தர் நகர், வேலூர்-9.



## நூலாசிரியர் வரலாறு

இந்நூலாசிரியர் பெரும் புலவர் வே. இராச வேலன், திருவண்ணாமலை சம்பு வராயர் மாவட்டத்தைச் சார்ந்த வாழியூர் என்னும் நல்லூரில் 25-10-1941இல் பிறந்தார். தாய்: வீரகங்கா; தந்தை: வேங்கடாசலம் எனும் ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர்கள்.

இடைநிலை ஆசிரியராகத் தம் பணியைத் தொடங்கிய இவர், நன்கு உழைத்து எம்.ஏ.,எம்.எட்., போன்ற பட்டங்கள் பெற்று, அரசு மேனிலைப்பள்ளியில் தமிழாசிரியராக இன்று பணியாற்றுகின்றார்.

நல்ல கவிஞர், சிறந்த எழுத்தாளர், அரிய பட்டி மன்றப் பேச்சாளர் எனும் சிறப்புகளின் சொந்தக்காரரான இவர், வாழியூர் கம்பன் கழகத்தின் செயலராக அருந் தொண்டுகள் ஆற்றி வருகின்றார்.

இவர்தம் தொண்டினைப் பாராட்டி சென்னை கம்பன் கழகம் 1987ஆம் ஆண்டு 'கம்பன் அடிப்பொடி நினைவுப் பரிசாக' ஓராயிரம் வெண்பொற் காசுகள் வழங்கிச் சிறப்பித்தது.

தாமரை, கவிதை உறவு, ருசா மலர், சுதேச மித்திரன், மாலை முரசு போன்ற இதழ்ச் சாலைகளில் தமது எழுத்துத் தேரேறி, அவ்வப்பொழுது உலாவரும் இவர் நல்லவர் மட்டு மல்லர்: செயல் திறனில் வல்லவருங் கூட! முல்லையாய் இவர் புகழ் எல்லையின்றி மணக்க வாழ்த்தி மகிழ்கின்றேன்!

—வேலூர். ம. நாராயணன் எம்.ஏ.

---

*அச்சிட்டோர் : வண்ணம் அச்சகம்*
*7டி. கச்சேரி சாலை வாணியம்பாடி.*